# சுவையான பழங்கள் உங்கள் குழந்தை வளர்ந்திட.




ஆப்பிள், மாம்பழம் மற்றும் வாழைப் பழத்தின் எல்லா வித நற்பயன்களையும் உங்கள் குழந்தைக்குத் தருவது ஃபாரெக்ஸ் ஃப்ரூட்ஸ் மட்டுமே—அத்துடன் கோதுமை மற்றும் பாலும் கொண்டது. குழந்தைகள் மிகவும் விரும்பும், முன்கூட்டிப் பக்குவம் செய்யப்பட்ட சுவைமிக்க உணவு.

ரெகுலர் பேக்கைவிட
100 கிராம் அதிகம்.

**ஃபாரெக்ஸ்-ஃப்ரூட்ஸ்**
சுவையுடன் வளரும் வழி.




Gx.357.90 Tm

* 'நாட்டைத் திருடாதே' — இது முழுக்க முழுக்க ஜனகராஜ் படம்.

# தேர்தல் சமயத்தில் ஒரு துணிச்சலான திரைப்படம்

'படத்தில் இடம் பெறும் சம்பவங்கள் நாட்டில் உண்மையாக நடைபெறும் நிகழ்ச்சிகள். அவற்றுடன் எங்கள் கற்பனையைக் கொஞ்சம் சேர்த்திருக்கிறோம்'' என்கிற வெளிப்படையான அறிவிப்போடு தொடங்குகிறது 'நாட்டைத் திருடாதே'! இப்படத்தில் இடம்பெறும் சம்பவங்கள்:

மத்தியில் ஆட்சி நிலைத்திருக்க மாநில ஆட்சியைக் கவிழ்ப்பது...

பரம்பரை ஆட்சிக்கு வழிவகுத்து நாட்டையே தங்களுடைய சொந்த சொத்தாகக் கருதுவது...

வாரியத் தலைமையைத் தங்களுக்கு வேண்டியவர்களுக்கும் உறவினர்களுக்கும் அளித்து, அதன் மூலம் ஊழல்கள் செய்ய வழி வகைகள் காணுவது...

வேண்டியவருக்கு எம். எல். சி. பதவி தர இயலாமல் போன காரணத்துக்காகக் கவுன்சிலையே ஒழித்து விடுவது...

சாராய விற்பனையைப் பினாமி பெயரில் எடுத்து, சப் கான்டிராக்ட் விட்டுப் பணம் சம்பாதிப்பது...

புறம்போக்கு நிலங்களைப் பட்டா போட்டுக் கொள்வது...

சுருக்கமாக, அரசியல் சாக்கடையை அப்பட்டமாகக் கிளறியிருக்கிறார்கள்!

தேர்தல் சமயத்தில் இத்தகைய துணிச்சல் மிக்க திரைப்படத்தைத் தயாரித்தளித்துள்ளார் பூர்ணசந்திர ராவ். 1958 இல் மாதம் 27 ரூபாய் சம்பளத்தில் ஒரு புரொடக்ஷன் பாய் ஆக, இத்துறையில் காலடி எடுத்து வைத்த பூர்ண சந்திரராவ், படிப்படியாக முன்னேறி, சுமார் 60 படங்களுக்குமேல் அனைத்து மொழிகளிலும் தயாரித்து வெளியிட்டிருக்கிறார். 'நாட்டைத் திருடாதே' படத்தைத் தயாரித்ததின் பின்னணி என்ன? அவரே கூறுகிறார்:

''சந்திரசேகர் பிரதமர் ஆன போது தான் அந்த எண்ணம் தோன்றியது — ஒரு ரத யாத்திரையின் விளைவு அது. பிற்படுத்தப்பட்டோர் மத்தியில் தன் செல்வாக்கைப்



* பூர்ண சந்திரராவ்.

பெருக்கிக் கொள்ள ஒருவர் மண்டல் கமிஷன் அறிக்கையை உதவிக்கு அழைக்க, அதனால் தம்முடைய செல்வாக்கு பாதிக்கப்படுமோ என்று இன்னொருவர் ரத யாத்திரை மேற்கொள்ள, நிலைத்து நிற்க முடியாத ஓர் அரசு பதவிக்கு வந்துவிட்டது.

115 கோடி ரூபாய் செலவில் ஒரு பொதுத் தேர்தல் நடந்து முடிந்து ஓராண்டுக்குள் இன்னொரு பொதுத் தேர்தல் வரக்கூடிய சூழ்நிலைகள் உருவாகி விட்டன. இத்தகைய செலவுகளை நாடு தாங்குமா?

நான் யோசிக்கத் தொடங்கினேன். உண்மையிலேயே நாட்டுப் பணிதான் லட்சியம் என்றால், அதற்காகப் பதவியைக் கைப்பற்ற வேண்டிய அவசியமேயில்லை. காந்திஜியும் வினோபாஜியும் பதவியில் இருந்து கொண்டுதான் மக்களுக்குத் தொண்டாற்ற வேண்டும் எனக் கருதவில்லை. ஏன், அன்னை தெரசாவை எடுத்துக் கொள்ளுங்கள். தொண்டாற்ற அவர் அரசியலையோ பதவியையோ நாடவில்லையே!

இப்படியெல்லாம் யோசித்துக் கொண்டிருந்த போது, சென்ற ஆண்டு இறுதியில் ஒரு பத்திரிகையில் இந்திய அரசியல்வாதிகளைப் பற்றியும், நாடு அவர்களால் எப்படிச் சீர்குலைகிறது என்பது பற்றியும் ஒரு கட்டுரை படித்தேன். அதன் விளைவாக இந்தக் கதை மனத்தில் உருவாகியது. பிப்ரவரியில் இதனைத் திரைப்படமாகத் தயாரிப்பது என்று முடிவு செய்தேன். இரண்டே நாட்களில் திரைக்கதை, வசனம், தயாராகியது. இருபத்தேழே நாட்களில் படப்பிடிப்பு முடிந்து விட்டது!

தமிழ்ப் புத்தாண்டு அன்று வெளியிடத் திட்டமிட்டு ஏப்ரல் 9 அன்று சென்சாருக்குப் போட்டுக் காட்டினேன். படத்தை வெளியிட அனுமதிக்க முடியாது என்று ஒரேயடியாகக் கூறிவிட்டார்கள். அரசியல் அமைப்புகளையும் ஜனநாயக நிறுவனங்களையும் நீதிமன்றங்களையும் மிகவும் மோசமான, ஏளனமான முறையில் சித்திரித்திருப்பதாகக் காரணம் சொன்னார்கள்.

'ரிவைஸிங் கமிட்டி'க்குப் போன போது 42 வெட்டுக்களோடு படத்தை வெளியிட அனுமதித்தார்கள். 37 இடங்களில் வசனங்கள்; 5 இடங்களில் காட்சிகள் வெட்டப்பட்டன.

தெலுங்கில் இத்தகைய படங்கள் வெளியாகியுள்ளன. அவை தமிழில் மொழி மாற்றம் செய்யப்பட்டும் வெளியாகியுள்ளன. முதல் முறையாக அரசியல் பின்னணியில் நேரடியாகத் தமிழில் தயாரிக்கப்பட்ட படம் இது. இதற்கு அனுமதி பெறுவதில் இத்தனைச் சிக்கல்கள் ஏன் என்பது புரியவில்லை. சென்சார் சட்டங்களின் அளவுகோல்கள் மொழிக்கு மொழி இப்படி மாறுபடுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது?"

— பிச்சாமி.

ஆசிரியர் பக்கம்

# கோபப்படுகின்ற டாக்டர்கள்!

"மருத்துவமா? வியாபாரமா?" என்ற தலைப்பிலும் "ஜெயிலுக்குப் போக வேண்டிய டாக்டர்கள்" என்ற தலைப்பிலும் நான் எழுதிய இரு கட்டுரைகளைப் படித்துவிட்டுப் பல டாக்டர்கள் பாராட்டிய போதிலும், சிலர் வருந்தியும் கோபித்தும் எழுதியிருக்கிறார்கள். 21.4.91 இதழில் ஒரு டாக்டரின் மறுப்புக் கடிதத்தையும் வட்ட மேஜைப் பகுதியில் பிரசுரித்து இருக்கிறோம்.

எதிர்ப்புத் தெரிவித்த டாக்டர்களில் பலரும் "ஜெயிலுக்குப் போக வேண்டிய டாக்டர்கள்" என்ற தலைப்பைப் பார்த்தே கோபம் அடைந்திருக்கிறார்கள்! "மருத்துவச் சிறப்பிதழ் என்று பிரசுரித்துவிட்டு, எடுத்த எடுப்பிலேயே டாக்டர்கள் எல்லாம் ஜெயிலுக்குப் போக வேண்டியவர்கள் என்று பொதுப்படையாகத் தாக்குவதா?" என்று ஆத்திரத்துடன் வினவுகிறார்கள். கொஞ்சம் யோசிக்க வேண்டும். "டாக்டர்கள் ஜெயிலுக்குப் போக வேண்டியவர்கள்" என்று தலைப்புத் தந்தால்தான் நீங்கள் நினைக்கிற அர்த்தம் வரும். அவ்வாறன்றி, 'ஜெயிலுக்குப் போக வேண்டிய டாக்டர்கள்' என்னும் போது ஜெயிலுக்குப் போக வேண்டிய சில பல டாக்டர்களைப் பற்றி மட்டுமே குறிப்பிடுவதாகும். மேலும், தலைப்பை மட்டும் பாராமல் கட்டுரையையும் அத்துடன் இணைத்துப் பார்த்துத்தான் ஒரு முடிவுக்கு வர வேண்டும்.

ஜெயிலுக்குப் போக வேண்டிய பலர் மருத்துவத் துறையில் மட்டுமல்ல, பொறியியல் துறையில், அரசியல் துறையில், பத்திரிகைத் துறையில், ஏன் நீதித் துறையில் கூட உண்டு. 'இல்லை' என்று யாரால் மறுக்க முடியும்? இவர்களைப் பற்றிச் சொன்னால் ஒட்டுமொத்தமாக அந்தத் துறைகளையே பழித்ததாகாது.

டாக்டர்களிடமும் அவர்களுடைய புனிதப் பணியிலும் எனக்கு நிறைய மதிப்பும் மரியாதையும் உண்டு. ஏன், நானே டாக்டராக வேண்டும் என்று விரும்பி, அது நிறைவேறாமல் போக மருத்துவம் இல்லையென்றாலும் மருத்துவத் துறையிலேனும் சேருவோம் என்று படித்துப் பட்டம் பெற்றவன்தான். பிறகு மனநிறைவு ஏற்படாததால் பத்திரிகைத் துறைக்கு வந்தது வேறு கதை. எல்லாத் துறைகளிலும் உள்ளது போல் மருத்துவத் துறையிலும் போலிகளும் பணத்தாசை பிடித்தவர்களும் உண்டு. அசிரத்தையால் தவறுகள் இழைப்பவரும் தெரிந்தே குற்றம் புரிகிறவர்களும் உண்டு. அவர்களைப் பற்றித்தான் பேச்சு.

என் கட்டுரைகள் சில டாக்டர்களுக்குப் பிடிக்கவில்லையே தவிர, சுயநலம் பிடித்த டாக்டர்களிடம் சிக்கிக் கொண்டு அவதிப்பட்ட கல்கி நேயர்கள் பலருக்கு ரொம்பவும் ஆறுதல் அளித்திருக்கின்றன. தங்கள் கதைகளைக் கண்ணீர் பெருக்கியபடி எழுதியிருக்கிறார்கள். உரிய காலத்துக்கு முன்னதாகவே பிறந்துவிட்ட ஒரு குழந்தையை எப்படியாவது காப்பாற்றிவிட எண்ணி, "இன்னும் சில நாட்கள் இன்குபேட்டரில் வைத்திருங்கள்" என்று எவ்வளவோ கெஞ்சியும் கேட்காமல் விரட்டி அடித்துவிட்ட ஒரு மருத்துவமனை பற்றி ஒரு நேயர் எழுதியிருக்கிறார். பிறகு அந்தக் குழந்தையை வேறு மருத்துவமனையில் சேர்த்து, காப்பாற்றியதையும் அதற்கு இப்போது மூன்று வயதாகி நன்றாக இருப்பதையும் குறிப்பிட்டிருக்கிறார். எக்ஸ்ரே போன்ற பரிசோதனைக்கு ஆள் பிடித்துத் தரும் தரகர்களாகச் சில டாக்டர்கள் செயல்படுவது பற்றி வேறு சிலர், அனுபவ ரீதியாகக் கோபத்துடன் எழுதியிருக்கிறார்கள். இன்னும் பல.

டாக்டர்கள் பற்றி ஒட்டுமொத்தமாகக் குறை கூறுவது என் நோக்கமாக இருந்தால் 'மருத்துவச் சிறப்பிதழ்' என்றே வெளியிட்டிருக்க மாட்டேன் என்பதைக் கோபப்படுகின்ற டாக்டர்கள் உணர வேண்டும். ஒரு டாக்டர் ரொம்பத்தான் கோபித்துக் கொண்டு தகாத வார்த்தைகள் எல்லாம் எழுதியதுடன், ஜெயலலிதா பற்றிய கவர் ஸ்டோரிக்குத் தாவி (24.3.91 இதழ்), "Professional ethics" என்று ஒன்று இருப்பது உனக்குத் தெரியுமா? நோயாளி பற்றிய தகவல்களை டாக்டர் எப்படி வெளியிட முடியும்?" என்று கேட்டிருக்கிறார்.

சாமானியர் நிலை வேறு; ஆட்சிப் பொறுப்புக்கு வருவோர் நிலை வேறு. அவர்கள் தங்கள் தேக ஆரோக்கியம் பற்றி மக்களுக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஜனநாயகத்தில் இதைத் தவிர்க்கக் கூடாது. டாக்டர்கள் தயங்கினால் கூட தலைவரே உண்மைகளைக் கூறுமாறு டாக்டரைக் கோருவதுதான் முறை. தங்களால் தேர்ந்தெடுக்கப்படும் தலைவருக்குக் கடினமான வேலைச் சுமையைத் தாங்கக் கூடிய உடல் பலமும் மனபலமும் உள்ளது என்பது மக்களுக்கு உறுதியாகத் தெரியவர வேண்டும்.

தமிழக சட்டமன்றத் தொகுதிகள் பங்கீடிலும் சரி, நாடாளுமன்றத் தொகுதி ஒதுக்கீடுகளிலும் சரி, அ. தி. மு. க. தலைவி ஜெயலலிதா சொன்னதைக் கை கட்டிக் கொண்டு கேட்டுள்ளது கூட்டணி கட்சியான காங்கிரஸ். இதன் மூலமாகவே தமிழக மக்களிடையே தமது 'இமேஜ்'க் கணிசமாக உயர்த்திக் கொண்டிருக்கிறார் 'ஜெ'.

'அனைந்தியக் கட்சியான காங்கிரஸின் தலைவர், இந்திராவின் புதல்வர் ராஜீவ் காந்தியே இந்த அம்மான் சொல்படிதான் கேட்கிறார்' என்ற கருத்து வாக்காளர்கள் மனத்தில் வேரூன்றி விட்டது. எம். ஜி. ஆரின் 'வாரிசு' என்று கருதப்படுவதால் பாமர மக்களின் ஆதரவை ஏற்கெனவே பெற்று விட்ட 'ஜெ'யின் கை இன்னமும் ஓங்கி விட்டது.

இந்தச் சூழ்நிலையில் தி. மு. க. வின் நிலைமை என்ன? ஜெ அலையை அவர்களால் நிறுத்த முடியுமா...? அல்லது கலைஞரின் நிலை; கன்யூட் அரசன் கதையாகி விடுமா? பல தரப்பினரிடமும் பேசி ஒரு கருத்துக் கணிப்பு செய்ய முற்பட்டோம்...

# ஜெ. அலையை நிறுத்த முடியுமா?



" வெற்றிக்குத் தயாராகிறார்...?



" அடுத்ததைப் பற்றிய கவலை...?

பள்ளிப்பாளையம் காவிரிப் பாலத்தின் அருகே ஒரு பெரிய கூட்டம் ஜெயலலிதாவை வரவேற்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. மண்டையைப் பிளக்கும் வெயில். காலை பதினொரு மணிக்கு வருவதாக இருந்த ஜெயலலிதா மணி இரண்டாகியும் வருவதாகத் தெரியவில்லை. ஆனால் கூட்டம், துளியும் கவலைப்படவில்லை.

''அம்மாவைப் பார்க்கிறதுக்கு நாங்க எவ்வளவு நேரம் வேணுமானாலும் காத்துக் கொண்டிருப்போம். எம். ஜி. ஆர். இறந்து போய் விட்டதாக நாங்கள் நினைக்கவேயில்லை. புரட்சித் தலைவி உருவில் நாங்கள் எம். ஜி. ஆரைத்தான் பார்க்கிறோம்'' என்கிறார் சூரம்பட்டியைச் சேர்ந்த தொண்டர் பன்னீர் செல்வம்.



* கூட்டணி 'முறியட்டுமா' என்று பயமுறுத்தியது...

ஜெயலலிதாவுக்கு இவ்வளவு வலுவான ஆதரவு ஏற்கெனவே இருக்கையில், பத்திரிகைகள் ''ஜெயலலிதாவுக்குத்தான் வெற்றி வாய்ப்பு'' என்று எழுதுகின்றன. மக்களிடையே ''இந்த நாட்டில் உள்ள ஒரே ஆம்பிள்ளை ஜெயலலிதாதான்யா'' என்பது போன்ற பேச்சுக்கள் அடிபடுகின்றன. இவையெல்லாம் 'ஜெ'யை மேலும் உயர்ந்த நிலைக்குக் கொண்டு போயிருக்கின்றன. 'வெற்றி வாய்ப்பு உள்ளவர்களுக்குத்தான் வோட்டுப் போட வேண்டும். இல்லாவிட்டால் நமது வோட்டு வீணாகி விடும்' என்ற தவறான, அப்பாவித்தனமான கருத்து வேறு நம் மக்களுக்கு உண்டு'' என்று அங்கலாய்க்கிறார் தி. மு. க. பிரமுகர் ஒருவர். ''இதன் விளைவு என்னவென்றால், மன அளவில் எங்கள் கட்சிக்காரன் சோர்வடைந்து இருக்கிறான். அவனைத் தயார்ப்படுத்துவது மிகவும் கஷ்டமான வேலை'' என்கிறார்.

வெறும் சிங்கிள் டீ சாப்பிட்டு விட்டு, இரவு முழுவதும் கண் விழித்துத் தேர்தல் வேலை பார்த்த தி. மு. க. தொண்டர்கள் குறைந்து விட்டார்கள். இடைமட்ட தி.மு.க. பிரமுகர்களிடையே கசப்புணர்வு மேலோங்கியிருக்கிறது. ''பதின்மூன்று வருட காலத்தில், அ. தி. மு. க. வில் உள்ள பிரமுகர்கள் ஒவ்வொருவரும் எப்படி சம்பாதித்துச் சொத்து சேர்த்தார்கள் என்று கண்ணால் பார்த்தோம். அரசியலில் சொத்து சேர்ப்பது, லஞ்சம் வாங்குவது தவறுதான். ஆனால் இதுவே நடைமுறையாகிப் போன பிறகு, எங்கள் கட்சிக்காரன் மட்டும் எதிர்பார்க்க மாட்டானா?'' என்று கேட்டார் தி. மு. க. பிரமுகரான ஈரோடு மா. சுப்பிரமணியன். பல தி. மு. க. வினரிடம் பேசிப் பார்த்த போது, 'தங்களைக் கட்டுப்படுத்திய கட்சித் தலைமை, உயர் மட்டத்தில் உள்ள சிலரை மட்டும் கண்டு கொள்ளாமல் விட்டது ஏன்?' என்று எரிச்சலோடு கேட்டார்கள்.

இதன் விளைவு என்னவென்றால், தி.மு.க. வின் தேர்தல் பணி மிகவும் மெத்தனமாக இருக்கிறது. பிரசாரத்தில் இரட்டை இலை தெரியும் அளவுக்கு உதய சூரியன் தெரியவில்லை.

''சோர்வு இருந்தது உண்மைதான். ஆனால் இப்போது நிலைமை மாறி விட்டது'' என்று நம்பிக்கையோடு பேசுகிறார் இளைஞரணி பிரமுகர் சின்னசாமி. ஆனால் நாம் பார்த்த வரையில் அவ்வாறு தெரியவில்லை.

கடந்த இரண்டாண்டு தி. மு. க. ஆட்சியில், பெரிய அளவில் ஊழல் புகார் எதுவுமில்லை. பல சமுதாய நலத் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டன. விவசாயிகளுக்கு இலவச மின்சாரம், பெண்களுக்குத் திருமண உதவி கடன், மாணவ, மாணவிகளுக்குப் பள்ளி சென்று வர இலவச பஸ் பாஸ், என்று பலப் பல. ஆனால் இத்தனையும் மக்களிடையே தி. மு. க. வுக்குச் செல்வாக்கு வளர்த்ததாகத் தெரியவில்லை.

''எம். ஜி. ஆர். துரும்பைத் தூக்கி அந்தப் பக்கம் போட்டாலும், சாதனையாகக் கருதிய மக்கள் எங்கள் கலைஞர், மலையை நகர்த்தி வைத்தாலும் மதிக்கத் தயாரில்லை...'' என்கிறார் மாவட்டச் செயலாளர் ஒருவர்.

''கலைஞர் எதைச் செய்தாலும் அதற்கு உள் நோக்கம் கற்பிக்கிறார்கள். நாங்கள் செய்த சாதனைகள் மக்களைச் சென்று சேராததற்குப் போதிய பிரசார பலம் இல்லாததும் ஒரு காரணம். எங்கள் கட்சிப் பத்திரிகையைக் கட்சிக்காரனே சரியாகப் படிக்காமல் இருக்கிறான். முன்பு போல் பட்டி தொட்டிகளில் கூட்டம் போடுவ

50

## கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்

### கல்லூரி மாணவர் கட்டுரைப் போட்டி

# கனவு காணுங்கள்!

'பகற் கனவு' என்று கிண்டலாகப் பேசிய நாட்கள் மலையேறி விட்டன. இன்று, எதிர்காலம் பற்றிக் கனவு காண்பதும், அதற்காகத் திட்டமிடுதலும், மன உறுதியை வளர்த்துக் கொள்வதும் ஒவ்வொருவருக்கும் அவசியம் என்று கருதப்படுகிறது. உங்கள் எதிர்காலக் கனவு என்ன? அது இன்றைய உங்கள் கல்வியுடன் தொடர்புடையதா, அல்லவா? ஏன்? கனவு நினைவாகத் திட்டம் என்ன? எழுதுங்கள். சிறந்த ஒரு பக்கக் கட்டுரைக்குப் பரிசு ரூ.50/– சிந்தனைச் சிதறல்களுக்கு ஆறுதல் பரிசு. கல்லூரி முகவரி, வீட்டு முகவரி இரண்டும் குறிப்பிட்டுக் கட்டுரை எழுதக் கடைசி தேதி: 11.5.91

நினைவூட்டுகிறோம். மிக அதிகமான முதல் பரிசு பெற்ற மாணவர் பொன் விழா மேடையில் ரூ. 2500 சிறப்புப் பரிசு பெறுவார். உறை மீது "நான் காணும் கனவு" என்று குறிப்பிடவும்.

"தலைவரோட முழு உருவச் சிலையைத் திறக்கப் போறதா அறிவிச்சுட்டு அவரோட மார்பளவுச் சிலையைத் திறந்து வைக்கிறாங்களே ஏன்?"

"வசூலில் பாதியைச் சிலை அமைப்புக் கமிட்டி உறுப்பினர்கள் சாப்பிட்டுட்டாங்களாம்!"

— ஞா. ஞானமுத்து



இல்லை. ஆனால் அதே வேளையில் எங்களுக்கு எதிரான பிரசாரம் பலமாக ஒலிக்கிறது. ஆட்சிக் கலைப்புக்குப் பிறகு தி. மு. க. தேச விரோதக் கட்சி' என்று வலுவான பிரசாரம் செய்யப்பட்டது. இதெல்லாம் கண்டிப்பாக வெற்றி வாய்ப்புக்களைப் பாதிக்கத்தான் செய்யும்."

**ப**டிக்காத பாமர மக்கள்தான் ஜெயலலிதாவின் கவர்ச்சி அரசியலுக்குப் பலியாகிறார்கள் என்று தி. மு. க. வினர் கூறுகிறார்கள். ஆனால் இதே, படிக்காத கிராம மக்கள்தான் கலைஞருக்கு எதிராகப் பழைய ஆதாரங்களை எடுத்துச் சொல்லி வாதாடுகிறார்கள்: "இப்போது விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் என்று கலைஞர் அறிவிக்கிறாரே... 1972ல், கட்டணக் குறைப்புக்கு நாங்கள் போராடிய போது ஒன்பது பேரைச் சுட்டுத் தள்ளினாரே! எங்களால் மறக்க முடியாது" என்கிறார்கள்.

"எதைச் செய்தாலும் உள்நோக்குடன் செய்பவர் கலைஞர். சட்டமன்றத் தேர்தல் வெற்றிக்கு பின் எம். ஜி. ஆர். சமாதியை அலங்கரித்ததும், இலவச அரிசி போட்டதும் எதற்காக? அந்த அரிசியைப் பாராளுமன்றத் தேர்தல் தோல்விக்குப் பின் போடாமல் நிறுத்தியது ஏன்?" என்று கேட்கிறார் வெள்ளக் கோயிலைச் சேர்ந்த பட்டதாரி இளைஞரான வெங்கடசாமி.

எதிர்ப்புப் பிரசாரங்கள் ஒரு பக்கம் சோர்வூட்ட, 'எல்லோரும் ஒப்புக் கொண்டால், நான் போட்டியிலிருந்து விலகித் தமிழ்நாடு முழுவதும் பிரசாரம் செய்கிறேன்' என்று கலைஞர் அறிவித்தது தொண்டர்களுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. மாற்றுக் கட்சிக்காரர்களோ 'தோல்வி பயம்' என்று பேச ஆரம்பித்து விட்டார்கள்.

கோஷ்டி பூசல் வேறு தி. மு. கழகத்தை ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறது. தேர்தல் டிக்கெட் கொடுப்பதில் பிரச்னைகள். இதனால் வெற்றி பெற வாய்ப்புள்ள தொகுதிகளைக் கூட மாற்றுக் கட்சியினருக்குத் தாரை வார்த்துக் கொடுக்க வேண்டியதாகி விடுகிறது! இதற்கு நல்ல உதாரணம் கோயில்பட்டி தொகுதி. இங்கு தி. மு. க. ஜெயிப்பதற்கு நல்ல வாய்ப்பிருந்தும் தொகுதியை வலது கம்யூனிஸ்ட் கட்சிக்குக் கொடுத்து விட்டார்கள். இதற்குக் காரணம், தி. மு. க. வேட்பாளராகப் போட்டியிட இருந்தவரை, கலைஞருக்கு நெருக்கமாக உள்ள பிரமுகர்களுக்குப் பிடிக்காமல் இருப்பதுதான் என்று கூறப்படுகிறது. கொ. சி. நடராஜனை ஒதுக்கி ரகுமான்கானுக்குத் தொகுதி ஒதுக்கியதும் மயிலையில் நிர்மலா சுரேஷை நிறுத்தியதும் அறிவாலயத்தின் முன் மறியலுக்கே வழி வகுத்துள்ளது.

ஜெ.க்குப் பெரிய அளவில் கூட்டம்

# வியர்க்குருவிலிருந்து நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.



## நைஸில் உபயோகியுங்கள்.

## வியர்க்குருவிலிருந்து விரைவில் நிவாரணம் பெறுங்கள்.

நைஸில் மருந்துக்கலவையுள்ள பவுடர். இது வியர்க்குருவின் எந்தத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதைத் தடுப்பதுடன், வியர்க்குரு பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது.

1. அளவுக்கு மீறிய வியர்வை ஏற்படுவதைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.






1961

கூடுவதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். நாம் எப்படியெப்படி அவர்களைச் சரிக்குச் சரியாக எதிர்ப்பது என்று திட்டமிட வேண்டும்... அதை விட்டு விட்டு 'என்னய்யா பெரிய கூட்டம், அந்தம்மா காங்கிரஸுடன் சேராமல் தனியாகக் கூட்டம் போடட்டுமே, கூட்டம் சேருமா என்று பார்க்கலாம்' என்று ஒரு தலைவர் பேசலாமா...?'' என வருந்தினார் தி.மு.க. இளைஞர் அணியைச் சேர்ந்த ஒருவர்.

இது தவிர, மக்களைப் பாதிக்கும் அன்றாடப் பிரச்னைகளில் தி. மு. க. கவனம் செலுத்தாதது அதன் செல்வாக்குச் சரிய ஒரு காரணம். ஈரோடில் மலரும் ஒரு பத்திரிகையின் செய்தி ஆசிரியர் கூறுகிறார்: ''நகரப் புறங்களில் ரேஷன் கடைகள் சுமாராக இயங்கினாலும், கிராமப்புறங்களில் நிலைமை சரியாக இல்லை. மண்ணெண்ணெய், பாம் ஆயில் போன்றவை இரண்டு மாதத்துக்கொருமுறை, மூன்று மாதத்துக்கொருமுறை கொடுக்கப்பட்டன. போடப்பட்ட அரிசியின் தரம் மிக மோசம். ஆனால் எம். ஜி. ஆர். ஆட்சியின் போது ரேஷன் கடைகளில் எந்தப் பொருளும் தட்டுப்பாடின்றிக் கிடைக்குமாறு பார்த்துக் கொண்டார். அவரது தொடர்ச்சியான வெற்றிக்கு இதுவும் ஒரு காரணம். இதில் கோட்டை விட்டார் கலைஞர். ஆற்காடு வீராசாமியிடமிருந்து உணவு இலாகாவைப் பொன் முத்துராமலிங்கத்திடம் கொடுத்தும் எந்தவித முன்னேற்றமும் இல்லை. வரும் தேர்தலில் தி. மு. க. வின் வெற்றி வாய்ப்பைப் பாதிக்கப் போகும் விஷயங்களில் இதுவும் ஒன்று.''

''ஏதோ தி. மு. க.காரனுக்குத்தான் சோர்வு ஏற்பட்டது போலவும், ஜெ. அலையைத் தடுத்து நிறுத்த முடியாதது போலவும் சொல்கிறார்கள். அ. தி. மு. க. வில் உள்ள உட்பூசல்கள் அக் கட்சியின் வெற்றி வாய்ப்பைப் பாதிக்காதா?'' எனக் கேட்கிறார் மா. சுப்ரமணியம்.

''ஜெயலலிதாதான் எம். ஜி. ஆர். வாரிசு, வோட்டு பிடிப்பவர் (Vote Catcher) என்று வைத்துக் கொண்டால், கடந்த சட்டமன்றத் தேர்தலில் 27 இடங்களைத்தானே அவரால் பிடிக்க முடிந்தது?'' என்று கேட்கிறார், நடந்து முடிந்த நாடாளுமன்றத் தேர்தலை மறந்து விட்டு. ''நாங்கள் இரண்டு வருடங்களாகச் சுத்தமான அரசைக் கொடுத்திருக்கிறோம். மக்கள் எங்களை நிச்சயம் அங்கீகரிப்பார்கள்'' என நம்பிக்கையுடன் பேசுகிறார்.

ஆனால் இந்த வாதங்களில் எல்லாம் வலு இருப்பதாகத் தெரியவில்லை.

ஜெ. அலையைத் தடுத்து நிறுத்துவது கிடக்கட்டும், அதன் வேகத்தைக் கட்டுப்படுத்தும் சக்தி கூட கலைஞருக்கு இருப்பதாகத் தெரியவில்லை! ஒரு வலுவான கூட்டணியை எதிர்த்து மற்றொரு வலுவான கூட்டணியை ஏற்படுத்த கலைஞர் தவறி விட்டார். காங்கிரஸ் — ஜெ.க்கு எதிரான எல்லா சக்திகளையும் திரட்டியிருந்தால் இந்தத் தேர்தலை அதிக பலத்துடன் எதிர் நோக்கியிருக்கலாம். குறிப்பாகப் பாட்டாளி மக்கள் கட்சியுடன் தேர்தல் கூட்டு வைத்துக் கொள்ளாததால் மூன்று மாவட்டங்களில் தி. மு. க. வுக்குப் பாதிப்பு ஏற்படும்.

மேலும் பெண்கள் மத்தியில் ஒரு மதிப்பை, ஆதரவைப் பெற்றுக் கொள்ளவும் கலைஞர் தவறி விட்டார். சட்டசபைச் சம்பவத்துக்குப் பிறகு குற்றம் சாட்டப்பட்ட துரை முருகனைக் குறைந்தபட்சம் அமைச்சர் பதவியிலிருந்து விலக்கியிருக்கலாம். அப்படிச் செய்திருந்தால் கலைஞர் பெண்களின் மதிப்பில் உயர்ந்திருப்பார். மாறாக, தி. மு. க. வைத் 'துச்சாதனக் கும்பல்' என்று அழைத்துப் பிரசாரம் செய்யும் வாய்ப்பை அ. தி. மு. க. வுக்கு அளித்துள்ளார்! துரை முருகனுக்கு இந்தத் தேர்தலிலும் நிற்பதற்கு சீட்டு கொடுத்திருக்கிறார்.

## ஃப்ரிஜ் பரிசு: கூப்பன் நெ. 3

நேற்று வரை நந்தவனம் தொடர்கதையில் ஒவ்வொரு வாரமும் வேண்டுமென்றே ஒரு தவறு செய்து விடுகிறோம். இந்த இதழில் என்ன? அதைக் கண்டுபிடித்துக் கீழே எழுதுங்கள். திருத்தத்தையும் கொடுங்கள். கூப்பனைக் கத்தரித்துப் பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள். கதை முடியும் வாரம் எல்லாக் கூப்பன்களுடன் 5 — 10 வரி விமர்சனமும் எழுதி அனுப்புங்கள். ஃப்ரிஜ் பரிசு தவிர ஆறுதல் பரிசுகளும் உண்டு!

தவறு: ______________________

திருத்தம்: ______________________






ஜெயலலிதா முதல்வரானால் பாதி நாட்கள் ஹைதராபாத்தில் இருப்பார். பெங்களூரில் இருப்பார் என்று தி. மு. க. வினர் பிரசாரம் செய்து கொண்டிருந்தாலும் கடந்த ஒரு மாத காலமாக ஜெ. நடந்து கொள்ளும் முறை கட்சி வட்டாரத்திலும், மக்களிடையேயும் அவருக்கு நல்ல பெயரை வாங்கிக் கொடுத்திருக்கின்றன. கட்சி அலுவலகத்துக்கு வந்து, கட்சிக்காரர்களிடம் பேசுவது, பத்திரிகையாளர்களைச் சந்திப்பது, காங்கிரஸுடன், தான் நினைத்த மாதிரி தொகுதி பங்கீட்டினை முடித்தது, கலைஞரை விட விரைவாகப் பிரசாரத்தை ஆரம்பித்தது, என்று எல்லாம் ஜெ.க்குப் புகழ் சேர்க்கும் விஷயங்களாக இருக்கின்றன. ஏற்கெனவே தாய்க் குலத்தின் ஆதரவை பெற்றுக் கொண்டிருக்கும் ஜெ. அதனைத் தக்கவைத்துக் கொள்ளும் விதமாக, 'நான் ஆட்சிக்கு வந்தால் மலிவு விலை மதுக் கடைகளை மூடுவேன்'' என்று கூறியிருக்கிறார். இந்த அறிவிப்பு நகரங்களிலும், கிராமங்களிலும் உள்ள பெண்களிடத்தில் உற்சாகத்தை உண்டாக்கி இருக்கிறது.

இந்த நிலையில் குறைந்தபட்சம் அடுத்த தேர்தலிலாவது தி. மு. க. ஒரு வலுவான கட்சியாக இருக்க வேண்டும் என்றால் என்ன செய்ய வேண்டும்? மிகவும் வேகமாகச் செயல்பட்டு இப்போது ஓய்ந்து போயிருக்கிற ஒரு மாவட்டச் செயலாளர் சொல்கிறார்: 'சொன்னால் கசப்பாகத்தான் இருக்கும். ஆனால் கலைஞர் தலைமைப் பதவியிலிருந்து விலக வேண்டும்.

''தமிழ்ப் பணி செய்து கொண்டு கட்சிக்கு ஓர் ஆலோசகராக மட்டுமே செயல்பட வேண்டும். புது ரத்தம் பாய்ச்சும் விதமாக ஓர் இளைஞரை (ஸ்டாலினை அல்ல) தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட சாதியினருக்கு எதிரான தனது போக்கைத் தி. மு. க. மாற்றிக் கொள்ள வேண்டும். தமிழ் நாட்டில் 99.99 சதவீதம் பேர் கடவுள் நம்பிக்கை உள்ளவர்கள்தான். ஆனால் சாதாரண மக்களிடையே தி. மு. க.வுக்குக் 'கடவுளைப் பிடிக்காத கட்சி' என்று பெயர் இருக்கிறது. இந்த நிலை மாற வேண்டும். ஆனால் தங்கள் கொள்கை அவ்வாறெல்லாம் மாற அனுமதிக்காது என்று கழகத்துக்காரர்கள் சொல்வார்களேயானால், வீரமணி தலைமையில் செயல்படும், திராவிட கழகத்தைப் போன்ற இன்னொரு இயக்கமாகத் தி. மு. க. மாறுமே தவிர, மக்களிடையே செல்வாக்கு பெற்ற கட்சியாக இருக்காது.''

— கௌசல்யா

படங்கள்: ராஜன்

அட்டை ஓவியம்: ஸ்யாம்

"**ரா**ஜ்குமார் மன்றாடியார் தவிர வேறு யார் தி. மு. க. வேட்பாளராக ஜெ.யை எதிர்த்து நின்றிருந்தாலும், டெபாஸிட் போயிருக்கும். இப்போது இருவருக்கும் கடுமையான போட்டி" என்கிறார்கள் காங்கயம் மக்கள். "ஜெ.க்கு அதிர்ச்சி தரும் விதமாக மன்றாடியாரை அறிவித்தது கலைஞரின் சாணக்கியம். அந்த அதிர்ச்சியில் தான் இன்னொரு தொகுதியையும் தேடி விட்டார் ஜெ." என்கிறார்கள்.

**ரா**ஜ்குமார் மன்றாடியாரின் முழுப் பெயர் நல்லதம்பி சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார் (அப்பாடியோவ்!) இவர் தந்தை சர்க்கரை மன்றாடியார் காங்கிரஸ் மந்திரியாக இருந்தவர். செல்வாக்கு



* காங்கயத்தில் 'ஜெ' கட் அவுட்

* மன்றாடியார்

# காங்கயம் – ஒரு முன்னோட்டம்

படைத்த விவசாயக் குடும்பம். வட்டாரத்தில் நல்ல காரியம், துக்க காரியம் என்று எல்லா சங்கதிகளுககும், ஏழை – பணக்காரர் என்ற வேறுபாடின்றி ராஜ்குமார் நேரில் சென்று விசாரித்து வருவார்.

வியாபாரத்திலும் கெட்டிக்காரர் 'லாலா மசாலா' தயாரிப்பது இவர் நிறுவனம் தான். ஏற்றுமதியில் பல சாதனைகளைப் படைத்திருக்கிறது லாலா மசாலா. இவரது மனைவி பெயர் ஜெயஸ்ரீ. வட இந்தியர் குடும்பத்தைச் சேர்ந்தவர்.

சென்ற நாடாளுமன்றத் தேர்தலில் பழனி தொகுதியில் போட்டியிட்டுத் தோல்வி கண்டவர் மன்றாடியார். இருந்தாலும், அந்த நாடாளுமன்றத் தொகுதிக்கு உட்பட்ட காங்கயம் சட்டமன்றத் தொகுதியில், காங்கிரஸ் வேட்பாளரை விட, 2500 வாக்குகள் கூடுதலாகப் பெற்றவர். இந்த அடிப்படையில் நம்பிக்கையுடன் தேர்தலை எதிர்நோக்கியிருக்கிறார் ராஜ்குமார் மன்றாடியார்.

* மனுத்தாக்கல்



**கா**ங்கயம் சட்டமன்றத் தொகுதியில் 1977லிருந்தே அ. தி. மு. க. வேட்பாளர்கள்தான் வெற்றி பெற்று வருகிறார்கள். ஆனால் காங்கயத்தில் இன்னமும் கல்லூரிகள் கிடையாது. தொழிற் பயிற்சிப் பள்ளி கிடையாது. விவசாயத்துக்குத் தண்ணீர் வசதி கிடையாது.

"இந்தத் தொகுதியிலிருந்து அம்மா தேர்ந்தெடுக்கப்பட்டால் இது முதலமைச்சர் தொகுதியாகி விடும். அப்புறம் ஏராளமான நன்மைகள் கிடைக்கும்!" என்கிறார் அ. தி. மு. க.வைச் சேர்ந்த மாரப்பன். ஆனால் காங்கயம், பர்கூர் இரண்டு தொகுதிகளிலும் வென்றால் எந்தத் தொகுதியை ஜெ. தக்கவைத்துக் கொள்வார் என்பது யாருக்கும் தெரியாதே!

கிட்டத்தட்ட 1,66,000 வாக்காளர்களைக் கொண்ட காங்கயம் சட்டமன்றத் தொகுதியில் 60 சதவீதம் கவுண்டர் இனத்தவர். தி. மு. க. வேட்பாளர் இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்.

"இந்த ஜாதிக் கணக்கெல்லாம் அம்மாவே இங்கு நிற்கும் போது எடுபடாது. மன்றாடியாரும், ஜெ ஆதரவு வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படுவார்" என்கிறார்கள் அ. தி. மு. க. கட்சிக்காரர்கள்.

போட்டி பயங்கரக் கடுமையாகத்தான் இருக்கப் போகிறது!

• — **தில்லப்பா**

படங்கள்: **ராஜன்**

# SBI MUTUAL FUND

# மாத வருவாய் திட்டம் II

## மாக்னம் மாத வருவாய் உங்களுக்கு அளிக்கிறது.

**13%** வருடத்திற்கு

**2** போனஸ்கள்

கூடவே ஊக்கப்பரிசு **1%** மே மாதம்

## திட்ட முடிவில் மூல தொகையில் உயர்வு

- திட்ட காலம்: ஆறு வருடங்கள்
- இரண்டரை வருடங்களுக்குப் பிறகு திரும்ப வாங்கும் வசதி. சலுகையில் 1.7.1996 க்குப் பிறகு.
- மத மற்றும் கல்வி சம்பந்த ட்ரஸ்ட், மற்றும் தார்மீக ஸ்தாபனங்களும் இத்திட்டத்தில் முதலீடு செய்து பிரிவு 11 (5)ன் கீழ் வரி லாபங்கள் பெறலாம்.



**SBI MUTUAL FUND**

எஸ் பி ஐ எம் எஃப்: ஆக்கபூர்வ திட்ட மானேஜர்கள், உறுதிபடுத்தும் முன் ரெக்கார்டுடன் கூடிய சித்தியுடன் சீராக வாக்குக் கொடுத்ததை விட திறமையாக பணியாற்றுகிறார்கள்.

திட்டம் அமலில் உள்ளது

SBIMF/91-4-TAM-A

# தேர்தல் தரும் தலைவலிகள்

ஒவ்வொரு தேர்தலின் போதும் கட் அவுட்டுகள், வளைவுகள் வைப்பதற்காகச் சாலைகள் தோண்டப்பட்டு ஆக்கிரமிக்கப் படுகின்றன; தேர்தல் பிரசார வாசகங்களால் தனியார் மற்றும் அரசுக்கு உரிமையான காம்பவுண்டு சுவர்கள் பாழ்ப்படுத்தப்படு கின்றன; ஸ்பீக்கர்கள் இரவு பகலாக அலறி அமைதியைக் குலைக்கின்றன....

நாமும் ஒவ்வொரு தேர்தலின் போதும்






இந்த அநியாய, அசௌகரியங்களைப் பற்றி முணுமுணுப்பதோடு நிறுத்திக் கொள்கிறோம்.

ஆனால் இந்த வருடத் தேர்தலில் ஒரு முன்னேற்றம் பாராட்டத்தக்க முன்னேற்றம்.

- தமிழ்நாடு சாலைப் பாதுகாப்புக் கழகம்
- ஆட்டோமொபைல் அஸோஸியேஷன் ஆஃப் சவுத் இந்தியா.
- சென்னை கிழக்கு – லயன்ஸ் கிளப்
- கன்ஸ்யூமர் ஆக்ஷன் குரூப்

ஆகிய நான்கும் இணைந்து

**JOINT ACTION FORUM FOR ROAD SAFETY**

என்ற அமைப்பைத் தோற்றுவித்துள்ளன.

'வருடந்தோறும் 24,000 புதிய வாகனங்கள் நமது சாலைப் போக்குவரத்



தமிழ்நாடு நுகர்பொருள் வாணிபக் கழகம்
TAMILNADU CIVIL SUPPLIES CORPORATION LIMITED



இல் சேர்கின்றன. மாதந்தோறும் அறுநூறு விபத்துக்கள் — இவற்றுள் அறுபதில் உயிர்ப் பலியாகிறது' என்று புள்ளி விவரம் தரும் சாலைப் பாதுகாப்பு அமைப்பு, தேர்தலை யொட்டி வைக்கப்பட்டுள்ள கட் அவுட்கள் வளைவுகளால் விபத்து விகிதம் அதிகரிக்கும் என்பதைச் சுட்டிக்காட்டி, அவற்றை நீக்கச் சொல்லிக் கோரிக்கை விடுத்துள்ளது. புதியவற்றை வைக்க வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டுள்ளது. தனியார் வீட்டுச் சுற்றுச் சுவர்களைப் பாழாக்கு வோர், அவ் வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு நஷ்ட ஈடு தர வேண்டும்; பொதுச் சொத்துக்களான சுவர்களில் எழுதுவதன் மூலம் அவற்றைத் திரும்பவும் வெள்ளையடிக்க மக்களின் வரிப்பணம் வீணாவதைத் தவிர்க்க வேண்டும் என்று தீர்மானங்கள் நிறைவேற்றியுள்ளது.







எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்குதான் என்று தீர்மானித்து விட வேண்டாம்... தமது வீட்டுச் சுவர் பாழாக்கப் பட்டுள்ளதை முழு விவரங்களுடன் காவல் துறை கமிஷனருக்கு எழுதி அதன் பிரதியை **Consumer Action Group, 44,** வெங்கடகிருஷ்ணா சாலை, சென்னை — 28 என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கலாம். புகார்களின் எண்ணிக்கை கணிசமாக இருந்து, அரசாங்க ஒத்துழைப்பும் கிடைத்தால் சுவர்களைப் பாழ்ப்படுத்திய நபர்கள் மீது சட்டபூர்வமான நடவடிக்கை எடுக்க முனைவார்கள் சாலைப் பாதுகாப்பு அமைப்பினர்.

**— பகவதி.**

படங்கள்: **உத்ரா, லயன்ஸ் கிளப்**



கருணாநிதி

வேட்பாளர் தேர்வில் கட்சிக்குள் அதிருப்தி

அந்தம்மா அலைதான் பெரிசா வந்து நம்மை நனைக்கும் போறதுன்னு பார்த்தா இந்தக் குளத்து அலை கூட வம்பு பண்ணுதே!








# கல்கி

1991 மே 5
மலர் : 49 இதழ் : 40
பிரஜோத்பத்தி சித்திரை 22



## நாட்டின் முதல் எதிரிகள்!

சென்னைக்கு விஜயம் செய்த ஜெயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள், மத ஒற்றுமைக்காக ஒரு பாதயாத்திரைக்குத் தலைமை தாங்கியதும், அமீர் மகாலுக்குச் சென்று ஆர்க்காடு நவாபைச் சந்தித்ததும் எந்த அளவுக்கு ஓர் ஆரோக்கிய மான பாதிப்பை நமது அரசியலிலும் சமுதாயத்திலும் ஏற்படுத்தும் என்பதைக் கணிக்க முடியாது என்றாலும் இது ஒரு நல்ல ஆரம்பம் என்பதை மறுப்பதற்கில்லை. ''மதம் என்பது ஒற்றுமையைப் பலப்படுத்த வேண்டுமேயன்றி, வேற்றுமைக்கு வழிகோலக் கூடாது'' என்று காஞ்சி காமகோடி பீடாதிபதி அன்று நடந்த ஒரு சர்வ மதக் கூட்டத்தில் வலியுறுத்தி இருக்கிறார்.

ஜாதிப் பிரிவினைகளும் மத வேற்றுமைகளும்தாம் நமது நாட்டின் முதல் எதிரிகள். இவற்றைத் தாக்கி, அழித்து, ஒழிப்பதற்குப் பதிலாக ஒவ்வோர் அரசியல் தலைவரும் இந்த அரக்கர்களுக்குத் தீனி போட்டுக் கொழுக்க வைத்துக் கொண்டிருக்கிறார்கள்!

நாடெங்கிலும் அம்பேத்கர் விழா நடந்து கொண்டிருக்கும் போது, அவர் தாழ்த்தப்பட்ட மக்களுக்காகப் பாடுபட்டார்; தொகுதி ஒதுக்கீடு, இட ஒதுக்கீடு ஆகிய வற்றுக்கு வழிவகுத்தார் என்பதையெல்லாம் நன்றியோடு நினைவு கூர்ந்து பேசலாம் என்றாலும், அம்பேத்கரே எந்தவிதமான ஒதுக்கீடும் சலுகையும் இன்றித்தான் மிக உன்னத மான நிலைக்கு உயர்ந்தார் என்பதையும் மறந்துவிடக் கூடாது. இட ஒதுக்கீடும் அதன் மூலம் ஜாதி உணர்வுகளும் நிரந்தரமாகி விடவா அம்பேத்கர் பாடுபட்டார்? இந்த அவல நிலைக்கு நாட்டை இட்டுச் செல்லாமல், காலக்கெடு நிர்ணயித்து, அதற்கு முன் தாழ்த்தப் பட்டவர்கள் நிலை உயரத் திட்டம் வகுத்து அமுல்படுத்துவது அதிகாரத்துக்கு வருவோ ரின் கடமை.

ஆனால் நடப்பதெல்லாம் இதற்கு நேர்மாறாகத்தான் உள்ளது. வி. பி. சிங் மண்டல் கமிஷன் கோஷம் எழுப்ப, அதற்கு மாற்றாக பி. ஜே. பி. ரதயாத்திரை நடத்த, அது மத உணர்வுகளைத் தூண்டிவிட, இப்போது வி. எச். பி. 10,000 சாதுக்கள்(?) தேர்தல் பிரசாரத்தில் இறங்குவார்கள் என்று அறிவித்துள்ளது!

இதற்குப் போட்டியாக டில்லி இமாமின் ஆதரவைப் பெற முயல்கிறது ஜனதா தளம். அவரது நிபந்தனைகளுக்குத் தலையாட்டுகிறது. மதச்சார்பின்மை என்று போலி யாகப் பேசி வரும் இ. காங்கிரஸ் தலைமை, கேரளத்தில் முஸ்லிம் லீகுடன் கூட்டணி அமைக்கிறது.

தமிழகத்திலே சமதுக் கட்சி பாட்டாளி மக்கள் கட்சியுடன் கூட்டணி உடன்பாடு காண, பா. ம. க. தலைவரோ, 'ஒரு ஹரிஜனை முதல்வராக்குவதுதான் என் லட்சியம்' என்கிறார். பிராமணர் மீது துவேஷத்தை வளர்ப்பதே தனது பணி என்று கருதும் திராவிடர் கழகத்துடன் தி. மு. க. வின் தோழமை தொடர்கிறது.

பஞ்சாபில் சீக்கியர்களைப் பகைத்துக் கொண்டாயிற்று; காஷ்மீரில் முஸ்லிம்கள், ''இந்திய நாய்களே'' என்று நம்மை விரட்டத் துணிகிறார்கள்! ''எல்லாவற்றுக்கும் ராஜீவ்தான் காரணம்'' என்று ஜக்மோகன் குற்றச்சாட்டுக்களை அடுக்குகிறார்!

பாட்னாவில், மாநில அரசு ஊழியர்களாகத் தாங்கள் பணி நிரந்தரம் பெற வேண்டும் என்று கிளர்ச்சி செய்யும் ஹோம் கார்டுகளில், குண்டர்களான பலர், பெண் களை மானபங்கப்படுத்தி, ஆண்களை அடித்து, வாகனங்களை நொறுக்கினார்கள். இவர்கள்தான் மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டிய படையினர்! இத்தகைய சூழலில், ஜாதி மத உணர்வுகளும் தேர்தலில் வேகம் பெறுமாறு தலைவர்கள் நடந்து கொண்டால் நாட்டின் கதி என்ன? நினைக்கவே வேதனையில் உள்ளம் நடுங்குகிறது.

எனவேதான், ஜெயேந்திரரின் சென்னை விஜயமும் அவரது நோக்கமும் புழுக் கத்தினிடையே இளந்தென்றலாகத் தோன்றுகிறது. இதமாக வருடிச் செல்லும் இந்த ஆரோக்கியக் காற்று பலமாக வீசட்டும். ஜாதி மத பேதமென்னும் நோய்க்கிருமிகளை நீக்கி, சூழலைத் தூய்மைப்படுத்தட்டும். ''எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் ஓர் நிறை, எல்லோரும் இந்திய மக்கள்'' என்ற பாரதி வாக்கு மெய்யாகட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

## வட்டமேஜை

# ஒட்டகத்துக்கு உடம்பெல்லாம் கோணல்!

● தேர்தல் கமிஷனர் சேஷனின் பேட்டி இந்த இதழின் மணிமகுடமாக விளங்கியது. 'இங்கு அதிகாரத்திற்கோ, சட்டங்களுக்கோ குறைவில்லை. ஆனால் அவற்றை அமுல்படுத்துவதற்கு வேண்டிய மன உறுதியோ விருப்பமோ இல்லாததுதான் பல சமயங்களில் நடவடிக்கை எடுக்கப்படாததற்குக் காரணம்' என்று துணிந்து அப்பட்டமாக உண்மையைக் கூறியது ஆச்சரியப்பட வைத்து விட்டது. வெல்டன் சேஷன் சார்!

குடந்தை கும்பகோணம், எஸ். மங்களம்.

● 'நல்ல வண்ணம் வாழலாம்' என்ற கவிஞர் அவர்களின் கட்டுரைத் தொடரில் சிந்தனையைத் தூண்டும் நல்ல பல கருத்துக்கள் விரவிக் கிடந்தன. தத்துவ முத்துக்களைச் சாதாரண மக்களுக்குப் புரியும் வகையில் கூறினால்தான் மனத்தில் பதியும் என்பதற்கு இக் கட்டுரை ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. இத் தொடரில், அடுத்து வரும் கட்டுரைகளை ஆவலுடன் எதிர்நோக்குகிறேன்.

பெங்களூர் – 8, குரும்பல் பாலமணி.

● இளந் துருக்கியர் என்று, சந்திரசேகர் புகழப் பட்ட காலத்திலிருந்து, இன்று பிரதமர் பதவியைப் பறிகொடுத்துத் தவிக்கும், நாள் வரை, அவருக்கு ஏன் இத்தனை வீழ்ச்சி என்பதற்குரிய சம்பவங்களை மணிக்கோர்வையெனத் தொகுத்துத் தந்த கட்டுரை கவைபடவே இருந்தது.

கும்பகோணம், எஸ். கே. மூர்த்தி.

● சூழ்ச்சி வலையில் சிக்கி, வீழ்ச்சி அடைந்திருந் தாலும், தாழ்ச்சியாக எண்ணாமல், மீண்டும் எழுச்சி யுடன் எழுந்து நிற்கும் சந்திரசேகரில், உண்மையான அரசியல்வாதி, பளிச்செனப் புலப்படுகிறார். ஆனால் சந்தர்ப்பவாதிகள் நடுவில் சிக்கியிருப்பதால் பிரகாசிக்க முடியுமா என்பது சந்தேகமே.

கும்பகோணம், பாலகிருஷ்ணமூர்த்தி.

● நோயின் நலிவால் நொடிகளையும் நொகை யாக்கும் மருத்துவத் துறையில் உள்ள டாக்டர். நிவாசர், சோப்பிலும், சாக்பீஸிலும் உருவங்களைச் செதுக்கும் கலையின் வயப்பட்டு அதில் சிறந்து விளங்குவதையும் அதன் மூலம் கிடைக்கும் வருவாயை நல்ல முறையில் பயன்படுத்த திட்டமிட்டுள்ளதையும் படித்த போது நினைத்தேன் "இவர் வித்தியாசமான வர்" என்று.

நன்னிலம், மிலைடி. கே. ஆர். சந்திரன்.

● 'ஒட்டகத்திற்கு, உடம்பெல்லாம் கோணல்' என்பது போல, உட்கட்சிப் பூசலுக்குள்ளாகி, 'எதைத் தின்றால், பித்தம் தணியும்' என்ற நிலையிலுள்ள நோயாளியைப் போல, நாடு முழுவதுமே, காங்கிரஸ் கட்சி சந்தர்ப்பவாதத்தைப் பின்பற்றி வருகிறது. நடைபெறவிருக்கும் நாடாளுமன்ற, சட்டமன்றத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி வெற்றி பெறுவது, 'தலை தப்புவது தம்பிரான் புண்ணியம்'தான். இந்த நிலையில் நீங்கள் வேறு, 'கஷ்ட நஷ்டங்கள் இருந்தா லும், தன்மானத்துடன் போராட வேண்டும்' என்று தலையங்கம் எழுதியிருக்கிறீர்கள். தன்மானமாவது, வெண்டைக்காயாவது... ஜெயலலிதா அம்மையாரின் மோதிரக் கையால் குட்டுப்பட, காங்கிரஸ் கட்சி புண்ணியம் செய்திருக்க வேண்டும்!

சிறுமுகை, ஜி. கதிரேசன்.

● தலையங்கம் படித்தேன். தமிழக காங்கிரஸின் தலையெழுத்தைப் பற்றி நாம் கவலைப்பட்டு ஒன்றும் ஆக வேண்டியதில்லை என்றாலும் ஆற்றாமை யாரை விட்டது! ஏற்கெனவே நோய்வாய்ப்பட்டுள்ள காங்கிரஸை நல்வழிப்படுத்துவதை விட்டு விட்டு ஜெ. என்ற டாக்டரிடம் அழைத்துச் சென்று மேலும் வதைக்கிறார்கள் என்பதில் உண்மையில்லாமலில்லை!

மேல்பட்டி, எல். மாறன்.

● அ. தி. மு. க. குட்டக் குட்டக் காங்கிரஸ் குனிகிறது என்பது வேதனை தருகின்ற விஷயமென்றாலும் தற்போதைய சூழ்நிலையில் காங்கிரஸ் வெற்றியைச் சந்திக்க வேண்டுமானால் பணியத்தான் வேண்டும் என்பதையும் தலையங்கத்தில் குறிப்பிட் டிருக்கலாம்!

சீர்காழி – 11, வி. வெங்கட்.

● வாழ்வு உயர்ந்திட, சுயமுயற்சி, தன்மானம், சுயமரியாதை, மனம் தளராமை போன்ற உறவினர் களைக் கொண்ட 'ரோஷ' குணம் உதவும் என்று சிறுகதையில் சொன்ன இரு மனிதர்களும் நிறைவாய்த் தெரிந்தனர். உயரிய கதை!

தஞ்சாவூர், இரா. இராமச்சந்திரன்.

● ஆர். சூடாமணி எழுதிய 'இங்கே எல்லோருக் கும் இடமுண்டு' சிறுகதை என்னை மிகவும் பாதித்து விட்டது. 'எல்லாக் குடும்பத்திலும் இப்படி நடந்து விட்டால், உலகமே சொர்க்கமாக மாறி விடுமே' என்ற எண்ணம் எனக்குள் பெரியதாய் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

மன்னார்குடி, ராஜ்கோகுல்.

● தன் மனைவிக்குப் பயந்து – மனைவி சொல் படி – மனைவியின் வீட்டாருக்கே உதவி செய்யும் இந்தக் காலத்துக் கணவன்மார்களிடையே ஸ்ரீதர் செய்யும் உதவி சாதாரணமானதுதான். ஆனால் கணவன் வீட்டு உறவினர்களையும் அரவணைக்கும் காவேரிதான் வித்தியாசமானவள்!

குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டு, தொண்டு செய்வதுதான் உலகத்தாருக்குச் செய்யும் தொண்டு என்பதை நவினமாக உணர்த்தியிருக்கும் ஆர். சூடாமணி பாராட்டுக்குரியவர்.

நெல்வேலி, வி. மீனாட்சி.

● முக்கிய டாகுமெண்டுகளில் மோசடியைத் தவிர்க்கப் படித்தவர்களும் தங்கள் விரல் ரேகையைப் பதிவு செய்யலாம் எனும் புதிய, பயனுள்ள, சிந்திக்க வேண்டிய யோசனையை டாக்டர். பி. சந்திரசேகரன் அவர்களின் பேட்டி மூலம் அறிய முடிந்தது. நன்றி!

சென்னை – 78, வி. எஸ். அனந்தராமன்.

● மாணவர் கட்டுரைப் போட்டி பகுதியில் மார்க்கஸ் அரேலியஸை கிரேக்க அரசன் என்று குறிப்பிட்டிருப்பது பிழை. அவர் ரோமானிய சக்கர வர்த்தி.

சென்னை – 32, சி. எஸ். மகாதேவன்.

அழத் தொடங்கி விட்ட ஒரு தாயற்ற குழந்தையைச் சமாதானப்படுத்த, ஓடும் ரயிலைச் சங்கிலியைப் பிடித்து இழுத்து நிறுத்தி அதற்காகச் செலுத்தும் 250 ரூபாய் அபராதம் ஒரு பெரிய தொகையல்ல என்கிற அறிமுகத்தோடு தொடங்கும் ஃப்ளாஷ்பேக் கதை.

சிறு வயதிலேயே ஊரை விட்டு ஓடிப்போய் விட்ட சின்னு. அவன் நினைவாகவே வாழும் அவன் தந்தை, தங்கை, அத்தை மகள் பவுனு. இவர்கள் மத்தியில் அந்தப் பட்டாளத்துக்காரர் (பாக்யராஜ்) வந்திறங்கி, அவர்தான் அந்த ஓடிப் போன சின்னு என்பது தெரிய வந்து, மகிழ்ச்சி வெள்ளம் மடைதிறக்கும் வரையில் மிதமான சஸ்பென்ஸுடன் கூடிய விறுவிறுப்பான சிரிப்புத் தூறல்.

பாக்யராஜ் பாணியில் அங்கங்கே சின்னச் சின்ன முத்தாய்ப்புகள். போகிறபோக்கில் அவ்வப்போது கண்ணில் படும் வகையில் எம். ஜி. ஆர். புகைப்படம். தெருச் சுவரில் இரட்டை இலைச் சின்னம்...



# பவுனு பவுனுதான்

இந்தச் சுறுசுறு ஓட்டத்தினூடே திடுமென, அசல் சின்னு உயிரோடு இல்லையென்பதும், வந்திருக்கும் பட்டாளத்துக்காரர் அவன் நண்பன் என்பதும் வெளிப்பட்டு ஒரு திருப்பம் ஏற்படும் போது அதனால் உருவாவது சோகம் மட்டுமல்ல— வேகத்தடையும் கூட.

முருங்கைக்காய் வரிசையில் இம்முறை அச்சுவெல்லம். கூடவே துணைக்கு ஐஸ்ஃப்ரூட். (பூசி மெழுகப்பட்ட பச்சை. பாவம், அதற்கு அந்த ஐயரும் அம்மாமியும் தானா கிடைத்தார்கள்? ஊர் மக்கள் ஒன்றுகூடி, பஞ்சாயத்து நடுவில், அந்தக் கணவன் மனைவிக்கிடையே எப்போதோ இடம் பெற்ற ஓர் அந்தரங்க உரையாடலை வற்புறுத்தி அப்பட்டமாக வெளியிடச் செய்து அவர்களை அழவைத்திருப்பது என்ன ரசனையோ?)

பட்டாளத்துக்காரர் சின்னு இல்லை என்கிற உண்மை தெரிந்தபின் ஒதுங்கிப் போகிறாள் பவுனு. சின்னுவுக்கு இடம் கொடுத்து விட்ட மனத்தில் இன்னொரு

வருக்கு இடம் கொடுப்பது இயலாது என்கிறாள். (''மனம் கெட்டால் கற்பு கெட்டதாகும்'' எட்ஸெட்ரா.) இன்னும் ஒரு படி மேலே போய், தன் இடது மார்பில் சின்னுவின் பெயரைப் பச்சை குத்தியிருப்பதை வேறு புலப்படுத்துகிறாள். ரோகிணியின் நடிப்பில் நிறைய உழைப்பு தெரிகிறது. குறிப்பிட வேண்டிய மற்றொருவர் — குலதெய்வம் ராஜகோபால்.

பவுனுவைத் தன் வசப்படுத்தும் முயற்சிகளில் ஈடுபட்டுத் தோற்றுப்போகும் பட்டாளத்துக்காரருக்கு அந்த முயற்சிகளில் அலுப்பு ஏற்படாவிட்டாலும் நமக்கு ஏற்பட்டு விடுகிறது.

— சி. ஆர். கே.

---

# வாழ்ந்தால் உன்னோடுதான்

**கதையைப் பற்றி ஒரு சிறு குறிப்பு வரைக:**

வசதிப் பெண் ஏழை ஊழியர் பையனைக் காதலிக்க அம்மா கோஅஹெட், பணக்கார அப்பாவிடம் எதிர்ப்பு, காதல் வலுப்பட்டு, உப பாத்திரம் ஒன்றின் முயற்சியினால், தியாகத்தினால் நிறைவேறுகிற எளிய கதை.

**பத்து மதிப்பெண் வினா:**

**குறைநிறைகளைக்குறிப்பிட்டுஎழுது.**

முதல் ப்ளஸ் பாயிண்ட் இளம் காதலர்கள். தன் ஏழ்மையைப்புரிந்து கொண்டு கதாநாயகியின் அத்தனை சீண்டல்களுக்கும் பதிலைப் பிரதிபலிக்காமல் அமைதி காக்கும் முதிர்ச்சி, அதிகமானதும் எழுதிக் கொடுக்கும் கடிதத்தில் நெகிழ்ச்சி, மற்றும் நடனம், சண்டை என்று ஹரீஸ் நம்மையறியாமல் பாராட்ட வைக்கிறார்.

மாலாஸ்ரீ ஒரு கிளுகிளுஸ்ரீ. தோழிகளுடன் இவர் கட்டுகிற பந்தயங்களும் (தோற்றல் தேனாம்பேட்டை சிக்னல் போலீஸுக்கு ஒரு முத்தம்!) அப்பாவிடம் மோதல்களும், உருகித் தவிப்பும் கச்சிதம். காதலுக்கு இவர் முயற்சிகள் விஷயத்தோடான கவர்ச்சிக் குத்தகை. ஆனால் குடும்பத்துடன் பார்க்கக் கொஞ்சம் நெளிய வேண்டி இருக்கும்.

அய்யர்வாள் ஒரு சொற்ப நேர நகைச்சுவைப் புயல்! கட்டிட உச்சியில் தன்பாட்டுக்குப் பெயிண்ட் அடித்துக் கொண்டிருப்பவனைத் தற்கொலை முயற்சி என்று ஊரைக் கூட்டி இவரின் கலாட்டாக்கள், கல்யாண மேடையில் சக புரோகிதருடன் புலம்பல் என்று மனுஷன் வெளுத்து வாங்குகிறார்.

வழக்கமான கதைதான் என்றாலும், நிலைக்களனாய் இளங்குற்றவாளிகள் பள்ளி, அங்கு நடக்கும் நெருடலான விஷயங்கள், காதலர்களைச் சேர்க்க அவர்களின் உதவி என்று எடுத்துக் கொண்டு, விசாகப்பட்டினம்கடற்கரையைத்[துணைக்கழைத்து, நகைச்சுவை, வன்முறை, இளமை என்று கலந்து ஒரு விறுவிறுப்பான பொழுதுபோக்குப் படமாக்கி இருக்கிறார் டைரக்டர். அப்பாவைப் பார்த்ததும் அந்த அலைகள் காட்டும் அதிர்ச்சியே அழகுதான்!

— வி. சி. குகநாதன் வசன உபயம் நன்றாகச் செய்திருக்கிறார். ஆனால் சில இடங்களில் உரையாடல் அநாகரீகமாகவும் போயிருப்பது வருத்தத்திற்குரியது.

**கோடிட்ட இடங்களை நிரப்புக:**

அத்தனை திறமையான அதிகாரி சாரதா தேவியைக்கணவர் ஏமாற்றுவது <u>காதிலே பூ</u>. முயற்சி செய்யாமல் சுற்றிச் சுற்றி ஓடி வந்து அவர் தன் மகனையே சுடுவது பாமர ஜனங்களை <u>உச்சு கொட்ட வைக்கும்</u> காட்சியே. இவரின் துவக்க நேர <u>மிடுக்கு</u> போகப் போகக் காணாமல் <u>போவது ஏமாற்றம்.</u>

**பொருத்துக:**

1. தேவையில்லை — ஒய். ஜி. மகேந்திரன் (3)
2. பிரமாதம் — கடைசி நிமிட கற்பழிப்புக் காட்சி (1)
3. பின்னணி குரல் மன்னன் — விசாகப் பட்டின கடற்கரை (2)

**சாய்ஸில் விடப்படும் கேள்விகள்:**

ராஜ்கோட்டியின் இசை எப்படி? கவிஞர் வைரமுத்து இப்படி உதவாக்கரை பாடல்களை எழுதத்தான் வேண்டுமா? இளமையான கதைக்கு நடுத்தர வயது மாதிரியான தலைப்பு பொருந்துகிறதா?

**ஒரே வார்த்தையில் விடையளி:**

டைரக்டர் சத்தியநாராயணன் பற்றி?

ஜனரஞ்சகம்.

— சுந்தர்ஜி



# எப்படிக் கேட்க முடியும்?

கமலா நாகராஜன்

அவசரத்துடன் அடித்த தொலைபேசியைத் தலைமை ஆசிரியர் கணேசன் எடுத்து ''ஹலோ'' என்றார்.

''வணக்கம் ஹெட்மாஸ்டர் சார்! நான் எஜுகேஷன் மினிஸ்டரோட பி.ஏ. சண்முகம் பேசறேன். மினிஸ்டர் இப்பத்தான் இங்கே வந்தார். மாலை நான்கு மணிக்கு உங்க ஸ்கூலுக்கு வரணும்னு சொன்னார். அதுதான் போன் பண்றேன்'' — செய்தி கேட்டுத் தலைமை ஆசிரியர் ஒரு கணம் திடுக்கிட்டார்!

உடனே சமாளித்துக் கொண்டு, ''மிக்க





''இந்த ஆபீஸில் லஞ்சம் தலைவிரிச்சாடுதுன்னு எப்படிச் சொல்றீங்க?''

''பாருங்களேன், டீ க்ளாஸ் கூடா இருக்குங்கிறதால ஒருத்தர் நூறு ரூபா நோட்டை உள்ளங்கையில் விரிச்சு அதுக்கு மேல டீ க்ளாஸ் வைச்சுப் புடிச்சிருக்கார்!''

— குடந்தை எல். ராம்பிரபு

மகிழ்ச்சி சார்! அமைச்சரை வரவேற்கத் தயாராக இருப்போம்'' என்று பதிலளித்தார்.

''நன்றி'' என்று கூறிப் பேச்சை முடித்தார் பி. ஏ.

கணேசன் தமது உதவித் தலைமை ஆசிரியர் சம்பத்தையும், பள்ளி மாணவர் தலைவர் சந்திரனையும் அழைத்து, அமைச்சர் வரும் விவரத்தைக் கூறிப் பள்ளி அரங்கில் ஒரு சிறிய வரவேற்புக்கு ஏற்பாடு செய்யும்படி கூறினார்.

அவரது எண்ண ஓட்டம் இருபத்தைந்து ஆண்டுகள் பின்நோக்கிப் பாய்ந்தது.

அப்பொழுது கணேசன் இளம் ஆசிரியராக இருந்தார். பாடம் கற்பிப்பதில் மட்டுமின்றி விளையாட்டுக்களிலும் நல்ல தேர்ச்சியுடையவராக இருந்தார். மிகவும் கண்டிப்பும் நேர்மையுமுடைய ஆசிரியர்களிடம் பயின்று வந்தவராதலால் கணேசன் அன்பும், கண்டிப்பும், ஒருங்கே கொண்ட ஆசிரியராகவே நடந்து கொள்வார். மாணவர்கள் தவறு செய்யும் போது முதலில் கண்டித்துப் பிறகு தண்டிக்கவும் தயங்க மாட்டார்.

சுப்பையன் நான்காவது பாரம் முதல் கணேசனிடம் பாடம் கற்று வந்தான். கால் பந்தாட்டத்தில் சூரனாக இருந்தான். அதோடு சொற்பொழிவாற்றும் திறமையும் பெற்று மாணவர் தலைவனாக விளங்கினான். ஆனால் படிப்புக்கும் சுப்பையனுக்கும் வெகு தூரம். ஒவ்வொரு தேர்விலும் காப்பியடித்து எழுதியும் கூட மிகக் குறைந்த மதிப்பெண்களே வாங்குவான். விளையாட்டு வீரனென்ற சலுகையில் ஒருமாதிரியாகத் தேறி, பள்ளி இறுதி வகுப்பு வரையில் வந்தான். பள்ளியிறுதித் தேர்விலும் சுப்பையன் காப்பியடிக்க முயற்சி செய்து கண்காணிப்பாளராக இருந்த கணேசனிடம் அகப்பட்டுக் கொண்டான்.

கணேசன் அவனைத் தலைமை ஆசிரியரிடம் ஒப்புவித்தார்.

''சார் இவனை நான் பலமுறை எச்சரித்திருந்தும் இவ்வாறு செய்துள்ளான்!'' என்றார் கணேசன்.

அந்த நிலையில் சுப்பையன் தேர்வு எழுத அந்த ஆண்டு தடைசெய்யப்பட்டுப் பள்ளியிலிருந்து நீக்கப்படுவதைத் தவிர வேறு வழியில்லை. அடுத்த ஆண்டு வேறு ஊருக்குச் சென்று படித்தான்.

அரசியல்வாதிக்குத் தேவையான திறமைகள் சுப்பையனிடம் நிறையவே இருந்ததால், அவன் அத்துறையில் சேர்ந்து வேகமாக வளர்ந்து அமைச்சராகவும் ஆகி விட்டான். இப்போது கணேசன் பள்ளியின் தலைமையாசிரியர். சுப்பையனோ கல்வி அமைச்சர்!

''சார், அமைச்சர் வருகிறார்!'' என்று உதவித் தலைமையாசிரியர் தெரிவித்ததும் கணேசன் சிந்தனையிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு பள்ளியின் வாயிலை அடைந்தார்.

அமைச்சர் காரிலிருந்து இறங்கியதும், தலைமையாசிரியருக்குப் புன்முறுவலுடன் வணக்கம் செலுத்தினார்.

அதே நேரத்தில் கணேசனும் அமைச்சருக்கு வணக்கம் செலுத்தினார். பள்ளி மாணவர் தலைவன் அமைச்சருக்கு மாலை அணிவித்தான்.

அமைச்சருடன், தமது அறைக்கு நடக்கும் பொழுது கணேசனுக்குப் பழைய நினைவுகள் திரும்பின. தமது பழைய மாணவரான அமைச்சர் தம்மிடம் எப்படி நடந்து கொள்வார்? அந்தக் கசப்பான நிகழ்ச்சியை அவர் மறந்திருக்க முடியாதே! இப்போது அவர் தம்மிடம் எவ்வளவோ குறைகள் காண முடியும்! பழிவாங்க நினைத்தால் தம்மால் எதுவும் செய்ய முடியாது... இவ்வாறு ஓடின அவரது சிந்தனை அலைகள்.

தலைமையாசிரியரின் அறையில் தேநீர் அருந்தும் போது அமைச்சர் பேசத் தொடங்கினார். ''பல ஆண்டுகளான போதிலும் என்னை மறந்திருக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன்'' என்றார்.

''எப்படி மறக்க முடியும்?'' என்றார் கணேசன்.

''உங்கள் கால்பந்தாட்டமும் மேடைப் பேச்சுக்களும் இன்னமும் என் கண் முன்னால் நிற்கின்றனவே!'' என்றார்.

''அவை மட்டும்தான் நினைவில் நிற்கின்றனவா?'' என்றார் அமைச்சர் கள்ளச் சிரிப்புடன்.

கணேசன் பதில் கூறவில்லை. அதற்குள் சம்பத்தும் சந்திரனும் வந்து, ''எல்லாம் தயார், சார்'' என்றனர். கணேசன் அமைச்சரைப் பள்ளி அரங்குக்கு அழைத்துச் சென்றார். வரவேற்புக் கூட்டம் முறைப்படி தொடங்கியது. கணேசன் அமைச்சரை வரவேற்றுப் பேசினார். தமது உரையில் அமைச்சரது பள்ளி நாட்களில் அவர்

# யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நண்பர், உங்கள் வீட்டிலுள்ள தூசையும் அழுக்கையும் மிக எளிதாக அகற்றும் வழியை செய்து காட்டப் போகிறார்.

வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்.

அவர் பேச்சில் தன்னம்பிக்கை தொனிக்கும்— இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலேயே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றிவாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப்பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.



தூசு, சூழ்நிலை அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுபயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.

செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன. யூரோக்ளீன்: அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்வம் க்ளீனரை விடச் சிறந்தது. மற்றும் அக்வாகார்ட்: நீர் பைப்பில் பொருத்தக்கூடிய வாட்டர் ஃபில்டர் கம்-ப்யூரிஃபையர்.



**யூரோக்ளீன்**: உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்றுவிடும். **அக்வாகார்ட்**: ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால் கிருமிகள் அற்ற, பாதுகாப்பான சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.

உங்கள் குடும்பத்திற்கு சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும், சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

**அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள்வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய தீர்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது இம்முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ், லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.**



| யூரோக்ளீன் | அக்வாகார்ட் | யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட் |
|---|---|---|
| அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம் —வேக்வம் க்ளீனரை விட சிறந்தது | நீர் பைப்பில் பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபயர் | நவீன முறை சுத்தம் சுகாதாரத்தின் முன்னோடிகள். |

89/EFL/188 R 2-Im

சிறந்த விளையாட்டு வீரராகவும், சொற்பொழிவாளராகவும் திகழ்ந்ததைக் குறிப்பிட்டு, "இத்தகைய சிறந்த மாணவர் இன்று கல்வி அமைச்சராகவிருப்பது நம் பள்ளியின் பேறு!" என்று கூறினார்.

அடுத்துப் பேசிய அமைச்சர் "உங்கள் தலைமையாசிரியர் எனது சிறப்புக்களை மட்டுமே கூறினார்கள். அது அவரது பெருமனத்தைக் காட்டுகிறது. அவர் கூறாது விட்ட சிலவற்றை நான் கூறப் போகிறேன். இப் பள்ளியில் படிக்கும் பொழுது நான் படிப்பில் சிறந்து விளங்கவில்லை. சில தவறுகள் செய்தேன்" என்று கூறித் தாம் பள்ளியினின்று வெளியேற்றப்பட்ட நிகழ்ச்சியையும் கூறி அதுவே தமக்கு ஓர் உறுதியளித்து, வழிகாட்டியாகவும் விளங்கியது என்றார்.

பின்னர், "உங்கள் தலைமையாசிரியரிடம் எனக்கு மட்டற்ற மதிப்பு அன்றும் உண்டு; இன்றும் உண்டு. எனது சில திறமைகளின் காரணமாக அவருக்கு என் மீது தணியாத பற்றும் பாசமும் இருந்ததும் எனக்குத் தெரியும். எனினும் சொந்த அன்பும், பாசமும், தமது கடமை உணர்வையும், நேர்மையையும் மாசுபடுத்த அனுமதிக்காத பெருந்தகை அவர். அதனாலேயே என்னைத் தண்டித்தார். அவரது இந்தப் பண்பு எனது உள்ளத்தைத் தொட்டதினால் தான் நான் திருந்தி இந்த நிலைக்கு வந்துள்ளேன்.

"பல பள்ளிகளினின்றும் அழைப்பு வரும் போது கூட என்னால் அவற்றுக்குச் செல்ல இயல்வதில்லை. ஆனால் உங்கள் தலைமையாசிரியர் — எனது மதிப்பிற்குரிய ஆசிரியர் வழிநடத்தும் இந்த, எனது பள்ளியை நானே தேடி வந்துள்ளேன்" என்று உணர்ச்சி பொங்கக் கூறினார்.

நன்றி உரை நாட்டுப்பண் முடிந்து விடை பெற்றார்.

அன்று இரவு உணவு நேரத்தில் தமது மனைவியிடம் தமது முன்னாள் மாணவர் கல்வி அமைச்சராக இருப்பதையும் அன்று பள்ளிக்கு வந்ததையும் கூறினார் கணேசன்.

"நம்ப பிள்ளை நைன்டி பைவ் பர்சண்ட் வாங்கி இருக்கிறான். ஆனால் சிபாரிசு இல்லாமல் எஞ்ஜினியரிங் சீட் கிடைக்குமோ கிடைக்காதோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். நீங்க சொல்வதைக் கேட்ட பிறகு நம்ப பிள்ளைக்கு சீட் நிச்சயம் என்று தோணுதே!" என்றாள் கணேசனின் மனைவி.

"லக்ஷ்மி! நீ நினைக்கறது தப்பு. சுப்பையன் எவ்வளவு நேர்மையானவர்னு தெரிஞ்சு போச்சு. அதனால் முற்பட்ட வகுப்பைச் சேர்ந்த நம்ம பையனுக்கு விதிகளை மீறி அட்மிஷன் தரும்படி நான் எந்த மூஞ்சியை வைத்துக் கொண்டு கேட்பதாம்...? அந்த ஆசையையே விட்டுடு..." என்றார் கணேசன்.

டாக்டர் பதில்கள்:

# காய்ச்சிய தண்ணீர் குடிப்பதால் நோய்த் தடுப்பு சக்தி குறையுமா?

**● வி. தேவதாஸ், நாகர்கோவில்:**

**● தண்ணீரைக் காய்ச்சி, கொதிக்க வைத்து, ஆறிய பின்பு குடிக்க வேண்டும் என்று ஒருபுறம் ஓயாமல் பாடம் நடக்கிறது. எப்போதும் நீரைக் காய்ச்சிக் குடிப்பதால் நோய்க் கிருமிகளை எதிர்க்கும் சக்தியை உடல் படிப்படியாக இழந்து விடுகிறது என்று மறுபுறம் எதிர்ப் பிரசாரமும் தொடர்கிறது. மருத்துவரின் இறுதியான கருத்து என்ன?**

**●● டாக்டர் பவானி,
சென்னை — 17:**

●● தண்ணீரைக் காய்ச்சி ஆறவைத்துக் குடிப்பதே சிறந்தது. அப்படிச் செய்யும் பொழுது அதிலுள்ள பாக்டீரியா போன்ற நுண்கிருமிகள் அழிந்துவிடுகின்றன. காய்ச்சாத நீரில் **Round worm, Hook worm** போன்ற குடல் புழுக்களின் முட்டைகளும், அமீபியாஸிஸ் போன்ற சீதபேதியை உண்டாக்கும் கிருமிகளும் உள்ளன. இவற்றை எதிர்க்க உடலுக்கு இயல்பான எதிர்ப்பு சக்தியே கிடையாது. ஆகையால் நீரைக் காய்ச்சியே குடிக்க வேண்டும்.

**● அ. ஷண்முகசுந்தரம்,
சிட்லபாக்கம்:**

**● சாப்பிடும் போது தண்ணீர் குடித்தால் 'என்ஸைம்கள்' நீர்த்துப் போய் ஜீரண சக்தி பாதிக்கப்படும் என்றும் மாறாக அவ்வாறு நீர் குடிப்பது ஜீரணத்துக்கு நல்லது என்றும் முரணான கருத்துக்கள் உள்ளனவே!**

●● சாப்பிடுவதற்கு முன்பு தண்ணீர் அருந்துவது தவறு. இதனால் நம் வயிற்றில் சுரக்கும் அமிலம் **dilute** ஆகி விடுகிறது. அதனால் பசி குறைந்துவிடுகிறது. சாப்பாட்டின் இடையில் நீர் அருந்துவதால் அளவில் குறைந்த சாப்பாட்டைச் சாப்பிட்டாலும் வயிறு நிறைந்தாற் போல் உணர்ச்சி உண்டாகும். ஆகவே சாப்பிட்ட பின் தண்ணீர் குடிக்கும் முறையே சிறந்தது.

**● ஜயலக்ஷ்மி, கோவை (முழு விலாசம் தேவை):**

**● என் மகளுடைய உடம்பு எப்போதும் சூடாக இருக்கிறது. தெர்மாமீட்டர் வைத்துப் பார்த்தால் ஜுரம் இல்லை! இந்த உடல் சூட்டைத் தணிக்க முடியாதா?**

**●● டாக்டர் லக்ஷ்மி நாகராஜன்,
சென்னை — 18:**

● சில நாட்களுக்குத் தொடர்ந்து தெர்மாமீட்டர் வைத்து டெம்பரேச்சரைக் குறித்து வர வேண்டும். ஏற்ற இறக்கம் இன்றிச் சீராக நார்மலில் இருந்தால், டாக்டரை அணுகி அவர் யோசனை கேட்டு ரத்தப் பரிசோதனை, மார்பு எக்ஸ்ரே எடுத்துப் பார்க்கலாம். இதிலும் எல்லாம் சரியாக இருப்பின் நிறையத் தண்ணீர் (ஒரு நாளுக்கு 1½ லிட்டர்) குடிக்கச் செய்து பார்க்கலாம். பருத்தி ஆடைகளை அணிந்து உடலைக் குளிர்ச்சியாக வைத்துக் கொள்ளலாம். கடுமையான உடற்பயிற்சிக்குப் பிறகு உடல் சூடு அதிகரிக்க வாய்ப்புண்டு. மன உளைச்சல் அல்லது பரபரப்புக் காரணமாகவும் பயத்தினாலும் சூடு அதிகரிக்கும். மனம் விட்டுப் பேசி, பிரச்னைகள் ஏதும் உள்ளனவா என்று அறிய முயற்சி செய்யலாம்.

தொகுப்பு: **பானுமதி இராமச்சந்திரன்**






# அரசியல் பழசு; முகங்கள் புதுசு!

தி. மு. க. சட்டமன்ற வேட்பாளர் பட்டியல் வெளியான தினத்தன்று, அக் கட்சியின் மைலாப்பூர் தொகுதி வேட்பாள ராகத் தேர்வு பெற்ற நிர்மலா சுரேஷைச் சந்தித்தோம். திருவான்மியூரில் அவரது வீட்டு வரவேற்பறையில் நாற்பது நிமிடம் காக்க வைத்த பிறகு பிரசன்னமானார்.

''ரொம்ப 'ஸாரி'ங்க... காலைலேர்ந்து ஒரே போன் கால். தொடர்ந்து பேசித் தொண்டையே புண்ணாயிடும் போலிருக்கு'' என்றார். (இதுக்கே இப்படியா... தேர்தல் பிரசாரம் வேறு இருக்கிறதே!)

''கலைஞர்கள், பல்கலைக்கழக மாண வர்கள், ஆசிரியர்கள் என்று தொடர்ந்து வாழ்த்துச் சொல்லிட்டு இருக்காங்க... இன்னமும் கட்சிக்காரங்ககிட்டேயிருந்து முழுத் தகவல்கள் வரவில்லை...

தென்சென்னை நாடாளுமன்றத் தொகுதியைக் கேட்டேன். கலைஞர் மைலாப்பூர் சட்டமன்றத் தொகுதியைக் கொடுத்திருக்கிறார். எனக்கு மிகவும் சந்தோஷம் — காரணம்: மைலாப்பூர் எனக்கு மிகவும் அறிமுகமான பகுதி. நண்பர்கள் நிறைய உள்ளனர்; பல கூட்டங் கள் பேசியிருக்கிறேன்; நான் ஷாப்பிங் போவது கூட மைலாப்பூரில்தான்...!''

சவுதியிலிருந்து வந்திருந்த தமது கணவரை அறிமுகப்படுத்தினார் நிர்மலா.

''எனக்கு இவள் தேர்தலில் நிற்கப் போவது பற்றி எதுவுமே தெரியாது. நான் இங்கு வந்த பிறகுதான் மெதுவாச் சொல்றா...'' என்று சிரித்தார் சுரேஷ்.

டி. வி. யில் செய்தி வாசிப்பாளராக மக்களிடையே அறிமுகம் பெற்று விட்ட நிர்மலா, இப்போதெல்லாம் ஏன் செய்தி வாசிப்பதில்லை...?

''பாலிடிக்ஸ்தான் காரணம்!'' என்றார் அந்த அரும்பும் 'பாலிடிஷியன்'!



''ஜெ' அலை பற்றிக் கவலை இல்லை!'' — நிர்மலா சுரேஷ்.

''இந்தியா ஒரு கூட்டாட்சி நாடு; மாநில உணர்வுகளுக்கு மதிப்பு கொடுக்கணும்; இதனால் தேசியத்திற்கு ஆபத்து என்பதெல் லாம் சுத்த ஹம்பக்'' என்று தீவிரமாகப் பேசிய நிர்மலா, மண்டல் விவகாரம் பற்றிக் கருத்துக் கேட்ட போது, ''இந்த சப்ஜெக்டை நல்லா ஸ்டடி பண்ணிட்டுப் பேசறேனே...'' என்று கூறி விட்டார்.

தி. மு. க. ஆட்சி கலைக்கப்பட்ட போது மத்திய அரசின் செயலைக் கண்டிக் கும் விதமாக, பல்கலைக்கழக நண்பர்களு டன் இணைந்து Rise for Democratic Rights (RIDER) என்ற அமைப்பை உருவாக்கி, கண் டனக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தார் நிர்மலா சுரேஷ்.

''என் அரசியல் உணர்வுகள் அக் கூட்டத் தில் வெளிப்பட்டதைக் கண்டு சில நண்பர் கள், 'நீங்கள் தி. மு. க. சார்பில் போட்டி யிடலாமே' என்று கூறி அவர்களே மனு வாங்கி, நிரப்பி என் கையெழுத்தை வாங் கிச் சென்றனர்...'' என்று விவரித்த நிர்மலாவிடம்,

''ஜெ அலை வேகமாக வீசிக் கொண் டிருக்கும் போது தேர்தல் கடலில் குதிக்கிறீர் களே?'' என்று கேட்டோம்.

''அலைகளைப் பற்றிக் கவலைப்படுப வள் நான் அல்ல... தொகுதியில் ஒவ்வொரு வாக்காளராகச் சந்தித்து வோட்டுக் கேட்பதுதான் என் திட்டம். எம். எல். ஏ. வாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், மனு கொடுக்கும் மக்களுக்குக் குறைந்தபட்சம் ஒரு வரி பதிலாவது போடுவேன்... என்று எதிர்காலம் பற்றி நம்பிக்கையோடு பதில் சொன்னார் நிர்மலா.

பல்கலைக்கழகத்தில் 'ஹைக்கூ' கவிதை கள் பற்றி ஆராய்ச்சி செய்து வரும்

இவருக்காகத் தமிழ்க் கவிஞர்களும் மாணவர்களும் கூடப் பிரசாரத்தில் ஈடுபடப் போகிறார்களாம்.

ஆக, மைலாப்பூர் தொகுதியில், இந்தத் தேர்தலையொட்டித் தெருவெங்கும் தமிழ்க் கவிதை முழக்கம் கேட்கும் என்று எதிர் பார்க்கலாம்!

**ம**காலிங்கபுரத்திலுள்ள நடிகை ஜெய சித்ரா வீட்டு வாசலில் கதர் சட்டையணிந்து இரண்டு மூன்று நபர்கள்... ஜெயசித்ரா காங்கிரசில் சேர்ந்துள்ளதை ஞாபகப்படுத் தினார்கள்.

''கொஞ்சம் வெயிட் பண்ணுங்க...''

காத்திருந்து, இரண்டு தடுப்புக் கதவுகள் கொண்ட ஏ. ஸி. அறையில் ஜெயசித்ரா வைச் சந்தித்தோம்.

''எல்லோரும் நான் காங்கிரஸில் சேர்ந் தது குறித்து ஆச்சர்யப்படுகிறார்கள். In fact, மூன்று வருடங்களுக்கு முன்னால், மறைமலைநகர் மாநாடு நடந்த போதே நான் சேர்ந்திருப்பேன். குழந்தைகள் கொஞ் சம் பெரியவர்கள் ஆகட்டும் என்று தள்ளிப் போட்டேன். இப்போதுதான் நேரம் கூடி வந்தது...'' என்றார் ஜெயசித்ரா.

''தேர்தல் சமயம் பார்த்துச் சேர்ந்திருக் கிறீர்களே...?'' என்றோம்.

''வேட்பாளராக ஆசைப்பட்டு நான் சேரவில்லை; தேர்தல் பிரசாரத்தில் என் பங்கும் கொஞ்சம் இருக்குமே என்ற எண்ணத்தில்தான் சேர்ந்தேன்...

''காங்கிரஸ் கட்சியைத் தேர்ந்தெடுக்கக் காரணம்...?

''தேசத்துக்குக் காங்கிரஸ் செய்ததை விட வேறெந்தக் கட்சி அதிகம் செய்திருக்கு...? நேரு, இந்திரா காந்தி, ராஜீவ் காந்தி என்று தொடர்ந்து இந்தியா வுக்குப் பெருமை சேர்த்தார்கள்... மேலும் என் தந்தையார் காங்கிரஸ் கட்சியோடு தொடர்பு கொண்டவர்...''

''சினிமா மூலம் பெற்ற செல்வாக்கை வோட்டுச் சேர்க்கப் பயன்படுத்தலாமா..?'' படிக்காத மக்கள் சினிமா கவர்ச்சியில் மயங்கி வோட்டுப் போடுவார்களே...?''

''ஏன் ஸார்! மக்கள் என்ன முட்டாள் களா? இப்போதெல்லாம் நீங்கள் நினைப் பதுபோலில்லை! மத்தியில் யாருக்கு வோட் டுப் போட வேண்டும் மாநிலத்தில் யாருக்கு வோட்டுப் போட வேண்டும் என்று வேறு படுத்திப் பார்க்கும் அளவுக்கு அவர்கள் புத்திசாலிகள்.''

**கா**ங்கிரஸ் கட்சி நிலையான ஆட்சி தரும் கட்சியா? போபர்ஸ் ஊழல் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? அரசியல் சட்டப் பிரிவு 356 தேவைதானா? போன்ற கேள்வி களைக் கேட்டால்...

''இன்னும் ஒரு மாதம் பொறுத்து வாருங்கள்...'', என்கிறார் ஜெயசித்ரா.



* காங்கிரஸில் சேருகிறார் ஜெயசித்ரா

இப்போது தேர்தல் பிரசாரத்துக்குத் திட்டம் வகுத்துக் கொண்டிருக்கிறாராம்!

'பட உலகில் வாய்ப்பில்லாததால்தான் அரசியலுக்கு வந்திருக்கிறார்' என்ற தாக்கு தலை வன்மையாக மறுத்துப் படங்களைப் பட்டியலிடும் ஜெயசித்ராவுக்கு, 'ஜோஸ் யம்', 'நேரம்', 'கால'த்தில் அதிக நம்பிக்கை இருக்கிறது!

— ப்ரியன்




"என்னம்மா, அப்பா இப்படி பஸ் ஸ்டாப்பிலே நிக்க வெச்சுப் போயிட்டாரே" – சொன்னபின்பு சொல்லியிருக்க வேண்டாம் என்று பட்டது வசந்திக்கு.- அம்மா முகம் கறுத்தபடி வேறு பக்கம் திரும்பிக் கொண்டான்.

வாகனங்கள் தாறுமாறாய்ப் போய்க் கொண்டிருந்தன. பெட்ரோல் காற்றைச் சுவாசிப்பது அவளுக்கு இம்சையாகத்தான் இருந்தது. பெட்ரோல் புகை நீலத்திரையாகப் படர்வது போலிருந்தது அவளுக்கு. அவளுக்கான பஸ் என்றில்லாமல் எல்லா

பஸ்களும் திக்கின்றிப் போய்க் கொண்டிருப்பதாகப் பட்டது.

"நீங்க முன்னாலே போங்க..... இதோ வந்தர்றேன்"—சிவராமன் புஷ்பா தியேட்டர் பக்கம் வருகையில் சொன்னார். யாராவது நண்பர்களோ, உறவினர்களோ தென்பட்டிருக்கலாம் என்று வசந்தி நினைத்தாள். ஆனால் விறுவிறுவென்று எதிர்ச் சந்தில் நுழைந்து மறைந்து விட்டார்.

"எங்கம்மா போனார்?"

"போனார்...."

"எங்கென்னு சொல்லலியா?"

அம்மாவுக்கு வாகனங்கள் மேல் திடீர் கவர்ச்சி வந்துவிட்டதைப் போல அவற்றைக் கூர்ந்து பார்க்க ஆரம்பித்தாள். நீல நிறத்திலான அந்தக் கார் புஷ்பா தியேட்டர் பக்கம் வந்து மெதுவாக நீட்சியான தெருவின் மறு முனைக்குச் செல்கிறவரை கூர்ந்து பார்த்தாள். மீண்டும் இன்னொரு காருக்கென்று பார்வை மாறியது. அலுப்பைத் தீர்த்துக் கொள்வதற்கு ஏதோவொருவகையான விளையாட்டோ, சடுபாடோ என நினைத்தாள்.

'அம்மாவுக்கு நான் கூட அலுத்துப் போயிருப்பேன். பெற்று, வளர்த்துக் கல்யாணம் செய்து தந்த பின் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டு ஆசுவாசப் படுத்திக் கொள்கையில் — கர்ப்பம் என்று வந்து அம்மாவின் குட்டித் தூக்கத்தைக் கலைத்திருக்கிறேன். இனி குழந்தையைக் கையிலேந்தி புருஷன் வீட்டிற்குச் செல்கிற வரை அம்மாவுக்குமுழுசானதூக்கம்என்றில்லாதபடி ஆகிவிடும். ஆனால் அம்மா அலுப்பை வார்த்தைகளில் சொல்லிக் கொண்டதில்லை. அம்மாவின் அலுப்பு கூட அவளின் கை கால்களை மிருதுவாய் அமுக்கி விடுகையில்,'நான் பண்றேம்மா' என்று விளையாட்டாய்ச் சிறு சிறு வேலைகளைப் பிடுங்கிக் கொள்வதில் கரைந்து போயிருக்கிறது. அப்பா 'சித்தெ இருங்க' என்று சொல்லிவிட்டுச் சென்றதிலிருந்து பல நாட்களின் அலுப்பை முகத்தில் தேக்கிக் கொண்டவன் போல் சோர்ந்து தான் இருக்கிறாள்.

"என்னம்மா......அப்பா என்ன சொல்லிப் போனார். பஸ் பிடித்து நர்ஸிங் ஹோம் போய்க் காத்திருக்கலாமே."

தன் வயிற்றைப் பார்த்துக் கொண்டாள் வசந்தி. கர்ப்பிணி என்பவள் எப்படியோ காட்சிப் பொருளாய் ஆகிவிடுகிறாள் என்றிருந்தது. திருமண வாழ்க்கையின் சந்தோஷத்தைக் காட்டிக் கொள்கிற கர்ப்பம். கூச்சமாகத்தான் இருந்தது. இன்னும் இரண்டு மாதங்களுக்கு இப்படி வயிற்றுடன் அலைய வேண்டும். குழந்தை பிறப்பின் அற்புதம் எல்லா பழைய துக்கங்களையும் அடித்துக் கொண்டு போய்விடும் என நினைத்தாள். அதுவரை காத்திருக்க வேண்டும்.

கோயமுத்தூர் பஸ் ஸ்டேண்டில் ஒரு முறை தியாகராஜன் இப்படித்தான் அவளை நிறுத்திவிட்டுப் போனான். எதுவும் சொல்லாமல் நகர்ந்து விட்டிருந்தான். கொஞ்ச நேரத்துள் கண்கள் கலங்கி விட்டன அவளுக்கு. பார்வையைச் சுழல விட்டபடி இருந்தாள். பலர் அவளைக் கவனிப்பதை உணர்ந்து தலை குனிந்து நின்று கொண்டாள்.

கொஞ்ச நேரம் கழித்துச் சிகரெட் வாசனையை உணர்ந்தாள். திக்கென்றது. நிமிர்ந்து பார்த்தபோது தியாகராஜன்




நின்றிருந்தான்.

"என்ன பயந்திட்டியா......"

'ஆமாம்' என்பது போல் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"பத்து நிமிஷம் வுட்டுப் போனதுக்கே இந்தத் திகில்ன்னா, போன்னு நிரந்தரமா வுட்டுப் போனா எப்படியிருக்கும்..."

சுப்ரபாரதிமணியன்



''கட்சியில தனி கோஷ்டி ஆரம்பிக்கப் போறீங்களா, அதுக்கு இப்ப என்ன அவசியம்?''

''ஒரு கோஷ்டியிலேயும் என்னைச் சேர்த்துக்க மாட்டேங்கறாங்க!''

— ஞா. ஞானமுத்து.

---

யாரோ சட்டென்று அவளைக் கீழே தள்ளி விட்டது போலிருந்தது. மண்ணைத் தட்டிவிட்டுக் கொண்டு, காயங்களை ஒரு நிமிஷம் மறந்துவிட்டு முதலில் எழுந்து நிற்பதென்பது எவ்வளவு பெரிய சிரமம் என்றிருந்தது.

''எதுக்கு இப்படியெல்லாம் பேசறீங்க?''

''உங்கப்பாகிட்ட இந்தப் பண்டிகைக்கு ஒண்ணும் பண்ணலியான்னு கேக்கச் சொன்னதுக்குக் கேக்கலியே நீ.... போய்க் கேட்டுட்டு, வாங்கிட்டு வான்னு நான் உன்னை அனுப்புச்சுட்டா எப்படி இருக்குமின்னு நெனச்சுப் பார்க்கிறதுக்கு ஒரு சின்ன ஒத்திகை இது....''

ஆடிப் போய் விட்டாள் வசந்தி.

''கல்யாணமாகி மூணு வருஷமாச்சு. இன்னுமா பண்ணிட்டிருப்பாங்க?''

''பண்ண முடியாட்டி உன்னை எதுக்கு அனுப்பணும்? வீட்டிலியே வெச்சுக்க வேண்டியதுதானே ....''

''ஆறு மாசம் முன்னர்லே கல்யாணம் பண்ணிக் குடுத்த தங்கச்சிக்கே பண்ண முடியாமெ எங்கப்பா கஷ்டப்படறார்....''

''பண்ணணும்.... இல்லன்னா எப்படி ...''

தியாகராஜனின் வார்த்தைகளின் சூட்டைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை அவளால். பொரிந்து தள்ளி விடுவான். தப்பித்தால் போதுமென்று ஆறாம் மாதமே கிளம்பிவிட்டாள். 'எங்கம்மா வீடு எனக்குக் கர்ப்பப்பையாகச் சுகம் தரட்டும்.'

வந்தபின்தான் தெரிந்தது தங்கச்சியின் கல்யாணத்திற்குக் கடன் பட்டு, தொல்லைப் பட்டுக் கொண்டிருக்கிற அப்பாவைப் பற்றி. பெண்களின் பாரங்களைச் சுமப்பதற்கென்று பிறந்து விட்டவர் போல ஆகி விட்டார். பாரம் கண்களின் ஒளியை இடுங்கச் செய்து விட்டது. முதுகைக் கூன் படுத்திவிட்டது. வார்த்தைகளைத் தைரியமின்றிப் பேசச் செய்து விட்டது. எல்லாவற்றிற்கும் கடனாளி ஆகிவிட்டார். மனித வாழ்க்கையின் உச்ச கட்ட துயரத்தை அடைந்து விட்டார் போலிருந்தது.

''எங்காச்சும் உக்காரலாம்மா...''

''காப்பி டிக்கடை தான் தெரியுது. எங்க உட்கார்றது?''

''அப்பா எங்கே போனார். உனக்குத் தெரியாதாம்மா?'' வாகனங்களின் மேல், பார்வையை நிலைத்திருந்தவள் வசந்தியைப் பார்த்தாள்.

''காசில்லே.... தேவாங்கபுரத்திலே ஒருத்தர்கிட்ட கடன் வாங்கப் போனார்'' ரோட்டில் நிறுத்தி வைத்துவிட்டுப் போய் விட்ட துக்கம். தியாகராஜன் ரோட்டில் நிறுத்தி விட்டுப் போன மாதிரியே. அப்பா நிறுத்திவிட்டுப் போனதற்கு வித்தியாசம் இருக்கலாம். ஆனால் வீட்டை விட்டுப் புறங்கையால் தள்ளிக் கொண்டு வந்து நிறுத்தின மாதிரிதான் இருந்தது அவளுக்கு. தொண்டை அடைத்தது.

''வீட்லியே இருந்திருக்கலாம்மா...''

''நீதான் நர்ஸிங்ஹோம் போகணும் போகணும்ன்னே.... அவசரப்பட்டே அவர்கிட்ட காசிருக்கா இல்லியான்னு யோசிக்கலே... பெறகு போலாம்ன்னு அவர் சொன்னதைக் காதுலே போட்டுக்கலே. உன் அவசரம் உனக்கு...''

''என்னாலே எவ்வளவு சிரமம்ம்மா..!''

அம்மா இதற்கெல்லாம் பதில் சொல்ல என்ன இருக்கிறது என்பது போல மறுபடியும் வாகனங்களின் இயக்கத்தைப் பார்க்க ஆரம்பித்தாள். தொய்ந்து போய் அப்பா வந்து கொண்டிருந்ததைப் பார்த்தாள் வசந்தி. பெருமூச்சு விட்டுக் கொண்டாள். மெல்ல மெல்ல ஏறிக் கொண்டிருந்த கால் வலியையும், இடுப்பு வலியையும் ஒரு நிமிஷம் மறந்து விட்டு 'அப்பாடா' என்று உரக்கச் சொல்லிக் கொண்டாள்.

''ரொம்ப நேரம் நிக்க வெச்சுட்டேன். 18 A போயிடுச்சா..'' புது ஆட்களிடம் ஏதோ பேச்சுக்காக விசாரிப்பது போல அப்பா பேச ஆரம்பித்தார். வியர்வையைத் துடைத்தபடியே இருந்தார். கால்களின் புழுதி வேஷ்டியின் நுனிக்கும் ஏறியிருந்தது.

''ரெண்டு பஸ்ஸு போயிடுச்சு. இனி எப்பவோ..?''

''ரயில்வே ஸ்டேஷன் போயிட்டா வேறே பஸ் கூட இருக்கு. இங்க 18 A மட்டுந்தா வரும்....''

அம்மா உடனே விறுவிறுவென நடக்க ஆரம்பித்து விட்டாள். அப்பா வசந்தியின் முகம் பார்த்தார். ''நடந்தர்லாம்பா ஸ்டேஷனுக்கு'' என்றபடியே மெல்ல நடக்க ஆரம்பித்தாள்.

''மெதுவா போயிருக்கலாம்ப்பா... நான்தா இன்னிக்கேன்னு அவசரப்பட்டுட்டேன்.''

''பரவாயில்லம்மா... ஒண்ணும் சிரமமில்லே.''

அப்பாவுக்குக் கடன் கிடைத்திருக்க வேண்டும். இல்லையென்றால் இப்படி வார்த்தைகள் வராது. அழுகையைத் திரட்டிக் கொண்டு வருகிற வார்த்தைகள்

மாதிரி உம்... உம்... இல்லை என்பது போல ஒற்றை வார்த்தைகள்தான் வரும். தெளிவான வார்த்தைகள் அவளுக்கு ஆறுதல் தந்தன.

அப்பாவுக்கு முகத்தில் வியர்வை பெருகிக் கொண்டே இருந்தது. திரும்பத் திரும்பத் துடைத்துக் கொண்டார். அவரின் கைகள் உயர உயர வலது கையின் மோதிரம் இல்லை என்பது தெரிந்தது. கேட்கலாமா... காலையில் பார்த்த ஞாபகம். அல்லது நேற்று பார்த்த ஞாபகம். எப்படியாயினும் இப்போது கையில் இல்லை. என்னவாகியிருக்கும். அவரின் பாக்கெட்டிலிருக்கும் பணத்திற்கும் கையிலிருந்த மோதிரத்துக்கும் சம்பந்தம் நிச்சயம் இருக்கும் என நினைத்தாள்.

''தங்கச்சி கல்யாணம் முடிஞ்ச கையோட பெரியக்கா பிரசவத்துக்கு வந்துட்டா. ஆடிப் போயிருப்பீங்க. இப்ப தான்..''

வசந்தியின் பெரியக்காவுக்கு இது மூன்றாவது பிரசவம். மூன்றாவது என்றாலும் ''இன்னமும் அப்பா, அம்மா உசுரோடதானே இருக்காங்க... பொறந்தவூட்லியே போய்ப் பார்'' என்று அனுப்பி வைத்து விட்டார்கள்.

''கல்யாணச் செலவோட அவளோட பிரசவச் செலவும் ஆயிருச்சு..''

''கல்யாணக் கடனோட பிரசவக் கடனும் சேர்ந்திருச்சுன்னு சொல்லுங்க...''

''கடன்னு எப்பிடிம்மா சொல்றது. என்னோட கடமையில்லையா..''

''சந்தோஷமா இருக்கிறப்போ கடமைன்னு நெனக்கலாம். பாரம்னு வந்தப்புறம்...''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே. நீ எதை எதையோ நெனச்சுக் குழம்பிக்கறே...''

சற்று எரிச்சலுடன்தான் சொன்னார். அம்மா அவர்களுடனான இடைவெளி தான் தன்னை ஆசுவாசப்படுத்தும் என்பது போல இடைவெளிவிட்டு நடந்து கொண்டிருந்தாள்.

''இனி பிரசவத்துக்கும், மத்ததுக்கும் தங்கச்சி வந்து நிப்பா...''

''வரட்டும். என்னாலே முடியற வரைக்கும் பண்றேன்.''

''பொம்பளைங்களோட பார்வையிலே கர்ப்பங்கறது சந்தோஷப்படற விஷயம். சந்தோஷமான வாழ்க்கையோட ஒரு வெளிப்பாடு கர்ப்பமும், கொழந்தையும். புது வரவை நெனச்சு ஏங்கறதும், ஒடம்பு வேதனையெல்லாம் தாண்டிக் கொழந்தை பொறந்தப்புறம் வர்ற திருப்தியும் ஆசுவாசமும் உலகத்திலே எதுக்குமே இணை இருக்காது..''

''ஆமாம்மா... ஒரு கொழந்தை பொறக்கறது என்னிக்கிருந்தாலும் சந்தோஷம்தான்...''

''ஆனா இன்னொரு பக்கம் பார்த்தா பொண்ணுங்க கர்ப்பம்னு தெரிஞ்சதும் பெரியவங்க சந்தோஷத்தையும் ஆசீர்வாதத்தையும் மீறி ஒரு நிமிஷம் கலங்கித்தான் போறாங்க. வளைகாப்பிலிருந்து, பேர் வெச்சுக் கொழந்தையை நல்லபடியா அனுப்பற வரைக்கும் எல்லாத்துக்கும் கடன்படணும். கடனுக்குன்னு அவமானப்படும்படியா நடந்து ஒடுங்க வேண்டியிருக்கும்.''

''இதெல்லாம் சகஜம்தான்...''

''சகஜம்தான். ஆனால் சந்தோஷம்ங்கறதெல்லாம் மீறி, பணம் செலவு பண்ண வேண்டிய சடங்குன்ற எண்ணமே பெரிசாயிடுச்சு.''

''ஒரு வகையில் அப்படியும் இருக்கலாம். ஆனா இதெல்லாம் சந்தோஷம் தான்னு மனசு ஏத்துக்கற பக்குவம் எனக்கு இருக்கு. கடன், சடங்கு செலவுங்கறதெல்லாம் மீறி...''

அப்பா அப்படிச் சொன்னது அவளுக்கு ஆறுதல் தந்தது. தன் வார்த்தைகளால் உடைந்து போகாமல் உறுதியாய் இருக்கிறார் என்று சந்தோஷமாய் இருந்தது. 'ஆனாலும் செலவு செலவு தான்' என்று முணுமுணுத்துக் கொண்டாள். அதை உரக்கச் சொல்ல வேண்டும் என்றுபட்டது. ''இன்னிக்கு மோதிரம்... பிரசவத்துக்குள்ள என்னென்ன கை நழுவப் போகுதோ...''

அவளைத் தவிர்க்க நினைத்தது போல அப்பா இடைவெளி விட்டு விரைவாக நடக்க ஆரம்பித்தார்.

# சிவகாமியின் சபதம்

இருபத்தாறாம் அத்தியாயம்

## இருளில் ஒரு குரல்

கணநேரம் ஜொலித்து உலகை ஜோதி வெள்ளத்தில் மூழ்குவித்த மின்னலின் ஒளியிலே, புத்த பிக்ஷு ஏரிக்கரையில் நின்று கைகளைத் தூக்கிப் பேய்ச் சிரிப்பு சிரித்த காட்சியைக் கண்டதும், சற்று நேரம் குண்டோதரன் பீதியினால் கை கால்களை அசைக்க முடியாதவனாய் மரத்தோடு மரமாக நின்றான். பிறகு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு சேற்றில் தட்டுத் தடுமாறிக் கரை மேல் நடந்தான். கரையைப் பிளந்து கொண்டு தண்ணீர் ஓடிய இடத்தை நோக்கி உத்தேசமாக அவன் நடந்த போது மறுபடியும் கண்ணைப் பறிக்கும் மின்னல் ஒன்று மின்னியது. அதன் ஒளியில், வெட்டப்பட்டிருந்த கால்வாய், முன்னால் பார்த்ததைக் காட்டிலும் அகன்றிருப்பதையும், தண்ணீர் முன்னை விட வேகமாய்க் கரையைப் பிளந்து கொண்டு போவதையும் பார்த்தான். புத்த பிக்ஷு நின்ற இடத்தில் அவரைக் காணவில்லை. ஆனால், மண்வெட்டி மட்டும் கிடந்த இடத்திலேயே கிடந்தது.

உடனே குண்டோதரனுடைய மனத்தில் சிறிது தைரியம் உண்டாயிற்று. கால்வாயை ஒரே தாண்டாகத் தாண்டி அப்பால் குதித்தான். அக்கரையில் கிடந்த மண்வெட்டியைக் கையினால் தடவி எடுத்துக் கொண்டு அவசர அவசரமாக மண்ணைச் சரித்து வாய்க்காலில் தள்ளத் தொடங்கினான். அப்படித் தள்ளிக் கொண்டிருக்கும்போதே, 'ஆஹா! இது வீண் பிரயத்தனம் போலிருக்கிறதே!' என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்றியது.

அதே சமயத்தில் அவன் கழுத்தண்டை ஏதோ ஸ்பரிச உணர்ச்சி ஏற்படவே, சட்டென்று மண்வெட்டியைக் கீழே போட்டு விட்டு நிமிர்ந்தான். அவன் எதிரே கும்மிருட்டில் ஆஜானுபாகுவான ஒரு கரிய உருவம் நின்றது. அது புத்த பிக்ஷுவின் உருவந்தான் என்பதையும், அவர் தமது இரும்புக் கைகளால் தன்னுடைய கழுத்தைப் பிடித்து நெறிக்க முயல்கிறார் என்பதையும் ஒரு கணத்தில் தெரிந்து கொண்டான். குண்டோதரனுடைய வஜ்ரக் கைகள் புத்த பிக்ஷுவின் கை மணிக்கட்டுகளைப் பிடித்துக் கொண்டன.

மறுகணத்தில் குண்டோதரனுடைய தலைக்கு மேலே நாகநந்தி பிக்ஷுவின் பேய்ச் சிரிப்பு மீண்டும் ஒலித்தது.

இடையிடையே வானத்தைக் கிழித்துக் கொண்டு தோன்றி மறைந்த மின்னல் வெளிச்சத்தினால் இன்னும் கன்னங்கரியதாகத் தோன்றிய காரிருளில், விளிம்பு வரை தண்ணீர் ததும்பி அலைமோதிக் கொண்டிருந்த ஏரிக்கரையில், கணத்துக்குக் கணம் அகன்று வந்த உடைப்புக்கு அருகில், குள்ள உருவமுடைய குண்டோதரனுக்கும் நெடிதுயர்ந்து நின்ற புத்த பிக்ஷுவுக்குமிடையே பிடிவாதமான மல்யுத்தம் ஆரம்பமாயிற்று.



# அமரர் கல்கி

அந்த விசித்திரமான துவந்த யுத்தம் கால் நாழிகை நேரம் நடந்திருக்கலாம். அப்போது, கரையில் மோதிய ஏரி அலைகளின் 'ஓ' என்ற சப்தம், கரையைப் பிளந்து கொண்டு அப்பால் விழுந்த பிரவாகத்தின் 'ஹோ' என்ற சப்தம், வரவர வலுத்துக் கொண்டிருந்த 'சோ' என்ற மழைச் சப்தம், 'விர்' என்று அடித்த புயற்காற்றில் மரங்கள் பிசாசுகளைப் போல் ஆடிய மர்மர சப்தம் ஆகிய இந்த நானாவிதப் பேரொலிகளையும் அடக்கிக் கொண்டு, ''குண்டோதரா! குண்டோதரா!'' என்ற கம்பீரமான குரல் கேட்டது.

துவந்த யுத்தம் செய்த இருவரும் ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றார்கள். ஆனால், அவர்களுடைய கைப்பிடி மட்டும் நழுவவில்லை.

அது யாருடைய குரல் என்று குண்டோதரன் சிந்தித்தான். அசோகபுரத்திலிருந்து வரும் போது, தனக்குப் பின்னாலும் குதிரையடிச் சப்தம் கேட்டது அவனுக்கு நினைவு வந்தது.

''குண்டோதரா! சண்டையை நிறுத்து! உடைப்பை அடைக்க முயலாதே! வீண் வேலை! ஓடிப் போய் ஆயனரையும் சிவகாமியையும் காப்பாற்று! நான் சொல்லுவது காதில் விழுகிறதா?''

அந்தக் குரல் தன் எஜமானருக்கும் எஜமானரின் குரல் என்று குண்டோதரன் அறிந்து கொண்டான்.

''விழுந்தது, பிரபு! ஆக்ஞை!'' என்று கூவினான்.

குண்டோதரன் மறு குரல் கொடுத்தானோ இல்லையோ, இன்னொரு பெரிய மின்னல்—ஆயிரம் சூரியன் ஒளியை ஒத்துக் கண்களைக் குருடாக்கிய மின்னல் மின்னியது! அடுத்தாற்போல் ஒரு பேரிடி இடிக்கப் போகிறதென்பதைக் குண்டோதரன் உணர்ந்தான். ''இடி முழக்கம் கேட்ட நாகம்போல்'' என்னும் பழமொழி அச்சமயம் அவனுக்கு ஞாபகம் வந்தது. பிக்ஷுவின் கை மணிக்கட்டுகளை அவன் இன்னும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

அவன் எதிர்பார்த்தது போலவே இடி இடித்தது. அண்ட பகிரண்டங்கள் எல்லாம் இடிந்து தடதடவென்று தலையிலே விழுவது போல இடித்தது. இடி இடித்து நின்றதும் குண்டோதரனுடைய காதில் அதற்கு முன்னால் கேட்டுக் கொண்டிருந்த அலைச் சப்தம், மழைச் சப்தம் எல்லாம் ஓய்ந்து 'ஙொய்' என்ற சப்தம் மட்டும் ஒலித்துக் கொண்டிருந்தது. ''ஐயோ! காது செவிடாகி விட்டதா, என்ன?'' என்று குண்டோதரன் ஒரு கணம் எண்ணமிட்டான். ஆனால், அதே இடிச் சப்தம் காரணமாக நாகநந்தியின் பிடி தளர்ந்திருக்கிறது என்பதை அவன் தேக உணர்ச்சி சொல்லிற்று. அவ்வளவுதான்! தன்னுடைய வஜ்ர சரீரத்தின் முழுப் பலத்தையும் பிரயோகித்துப் பிக்ஷுவை ஒரு தள்ளு தள்ளினான்.

ஏரிக் கரையின் அப்புறத்தில் பிக்ஷு உருண்டு உருண்டு போய்க் கீழே உடைப்புத் தண்ணீர் பாய்ந்து கொண்டிருந்த பள்ளத்தில் தொப்பென்று விழுந்ததைக் குண்டோதரன் கண்டான்.

உடனே, ஒரு பெரிய அதிசயம் அவனைப் பற்றிக் கொண்டது. மின்னல் இல்லாத போது புத்த பிக்ஷு கரையிலிருந்து உருண்டு பள்ளத்திலே விழுந்தது அவனுக்கு எப்படித் தெரிந்தது? ஆஹா! இதென்ன வெளிச்சம்? குண்டோதரன் சுற்று முற்றும் பார்த்தான். சற்றுத் தூரத்தில் ஒரு பனை மரம் உச்சியில் பற்றி எரிவதைக் கண்டான். ஆ! அந்த மரத்தின் மேல் இடி விழுந்து தீப்பிடித்துக் கொண்டிருக்கிறது. வெளிச்சத்திற்குக் காரணம் அதுதான்!

பற்றி எரிந்த பனை மரத்தின் வெளிச்சத்தில் குண்டோதரன் இன்னும் சில காட்சிகளைக் கண்டான். அந்தப் பனைமரத்தைத் தாண்டி ஒரு குதிரை அதிவேகமாய்ப் போய்க் கொண்டிருந்தது. அந்தக் குதிரை மேலிருந்தவர்தான் சற்று முன்னால் தனக்குக் குரல் கொடுத்தவர் என்பதை உணர்ந்தான். ஏரியின் ஓரமாக இன்னொரு மரத்தில் நாகநந்தி பிக்ஷு வந்த குதிரை கட்டப்பட்டிருப்பதையும் கண்டான். அதற்கு மேல் வேறொன்றையும் பார்க்கக் குண்டோதரன் விரும்பவில்லை. அந்தக் குதிரை இருந்த இடத்தை நோக்கிப் பாய்ந்து சென்றான். நடுவில் கால் சறுக்கிக் கீழே

விழுந்ததைக் கூட அவன் பொருட்படுத்த வில்லை.

மரத்திலிருந்து குதிரையை அவிழ்த்து விட்டு, அதன் மேல் குண்டோதரன் ஏறினானோ இல்லையோ, பனைமரத்து வெளிச்சமும் அணைந்து விட்டது. அதுவரையில் சிறு தூறலாக இருந்தது. அப்போது பெரு மழையாக மாறியது. எத்தனையோ பெருமழையைக் குண்டோதரன் பார்த்ததுண்டு. ஆனால் அன்றைய இரவு பெய்த மழை மாதிரி அவன் பார்த்ததேயில்லை. வானம் பொத்துக் கொண்டு, அதற்கு மேலே தங்கியிருந்த தண்ணீர் தொட தொடவென்று கொட்டுவது போல் மழை கொட்டிற்று.

"ஆஹா! ஏரி உடைப்புக்கும் இந்தப் பெரு மழைக்கும் பொருத்தந்தான். நல்ல நாள் பார்த்துத்தான் நாகநந்தி இருப்பாற் கடலை வெட்டி விட்டார்!" என்று குண்டோதரன் எண்ணிக் கொண்டான்.

"எப்படியும் இந்த ஏரி வெள்ளம் அசோகபுரம் போய்ச் சேர்வதற்கு முன்னால் நாம் போய்ச் சேர வேண்டும்" என்று தீர்மானித்தான்.

ஆனால், அந்தத் தீர்மானத்தை அவனால் நிறைவேற்ற முடியவில்லை. அந்த இருளிலும், மழையிலும் குண்டோதரன் வழி கண்டுபிடித்துக் குதிரையை நடத்திக் கொண்டு அசோகபுரம் போய்ச் சேர்வதற்கு வெகு நேரம் முன்னாலேயே ஏரிக் கரை நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் உடைத்துக் கொண்டு வெள்ளம் பிரளய மாக ஓடத் தொடங்கி அசோகபுரத்தையும் அடைந்து விட்டது.



## இருபத்தேழாம் அத்தியாயம்

# "மாமல்லர் எங்கே?"

குண்டோதரனுக்கு எச்சரிக்கை செய்து விட்டுக் குதிரை மேல் விரைந்து சென்ற மனிதர் யார் என்பதை நேயர்கள் ஊகித்துத் தெரிந்து கொண்டிருப்பார்கள். சிற்பம், சித்திரம், சங்கீதம் முதலான லளித கலைகளில் வல்லவராயிருந்தது போலவே யுத்த தந்திரக் கலையிலும் தேர்ச்சி பெற்றவரும், மாறுவேடம் பூணுவதில் நிகரற்ற சாமர்த்தியம் வாய்ந்தவரும், வாதாபியின் சமுத்திரம் போன்ற சைனியத்தை வட பெண்ணைக் கரையில் எட்டு மாதம் நிறுத்தி வைத்தவருமான மகேந்திர பல்லவ சக்கரவர்த்திதான்.

காஞ்சிக் கோட்டையிலிருந்து வட திசையை நோக்கிக் கிளம்பியது முதல் மகேந்திர பல்லவர் கையாண்ட யுத்த தந்திரங்கள் இதைப் போல் பல சரித்திரங்கள் எழுதுவதற்குப் போதுமானவையாகும். நாகநந்தி என்னும் புத்த பிக்ஷுவின் வேஷம் பூண்டிருந்தவர் புலிகேசியின் அந்தரங்க நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒற்றர் என்று அவர் ஊகித்திருந்தார். அதைப் பரஞ்சோதி கொண்டு போன ஓலையிலிருந்து உறுதிப் படுத்திக் கொண்டார். நாகநந்தியின்

கையெழுத்தையும் இலச்சினையையும் மேற்படி ஓலையிலிருந்து தெரிந்து கொண்டது அவருக்குப் பலவிதங்களிலும் உபயோகமாக இருந்தது. அந்த உபயோகங்களில் ஒன்றுதான், பல்லவ ராஜ்யத்தின் எல்லைப் புறத்தில் காத்திருந்த கங்கநாட்டுத் துர்விநீதனை அவசரமாகக் காஞ்சி மாநகரை நோக்கி முன்னேறச் செய்தது.

புலிகேசியின் மாபெருஞ் சைனியத்திற்குப் பின்வாங்கிக் காஞ்சிக் கோட்டைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த மகேந்திர பல்லவர் தாம் கோட்டைக்குள் புகுந்து கொள்வதற்கு முன்னால் ஒரு பெரு வெற்றியடைந்து பல்லவ வீரர்களுக்கும் பல்லவ சாம்ராஜ்யத்துக்கும் மக்களுக்கும் உற்சாகம் ஊட்ட வேண்டுமென்று தீர்மானித்தார். போருக்குத் துடிதுடித்துக் கொண்டிருந்த குமார சக்கரவர்த்தியின் ஆத்திரத்துக்கு ஒரு போக்குக் காட்டவும் இந்தச் சந்தர்ப்பத்தைச் சக்கரவர்த்தி பயன்படுத்திக் கொள்ள விரும்பினார்.

எனவே, நாகநந்தி எழுதியது போல் துர்விநீதனுக்கு உடனே காஞ்சியை நோக்கி முன்னேறும்படி ஓலை எழுதி அனுப்பினார். அதைப் பார்த்து விட்டே துர்விநீதன் தன் சிறிய சைனியத்துடன் காஞ்சியை நோக்கி விரைந்து வந்தான்.

குண்டோதரன் கொடுத்த ஓலையைப் படித்ததும் நாகநந்திக்கு ஏற்பட்ட அளவில்லாத வியப்பையும் நேயர்கள் கவனித்திருப்பார்கள். அவருடைய ஓலையின்படி முன்னேறி வருவதாகத் துர்விநீதன் அதில் எழுதியிருந்தபடியால், தாம் அத்தகைய ஓலை ஒன்றும் அனுப்பவில்லை, இதில்



ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறதென்று தீர்மானித்துக் கொண்டு நாகநந்தி குண்டோதரன் கொண்டு வந்த குதிரையில் ஏறிச் சென்று புள்ளலூர்ப் போர்க்களத்தை அடைந்தார். அதற்குள்ளாக, கங்கநாட்டுச் சைனியம் தோல்வியடைந்து சேனா வீரர்கள் சிதறி ஓட ஆரம்பித்து விட்டார்கள். அந்த நிலைமையில், துர்விநீதனுடைய உயிரைக் காப்பாற்றுவது ஒன்றுதான் தாம் செய்யக் கூடியது என்பதை உணர்ந்த நாகநந்தி, அவனைத் தம்முடன் அழைத்துக் கொண்டு தெற்குத் திசையை நோக்கி விரைந்து ஓடினார்.

இந்தப் புள்ளலூர் யுத்தத்தை மாமல்லரையும் பரஞ்சோதியையுமே முழுதும் நம்பி மகேந்திர பல்லவர் விட்டு விடவில்லை. பொறுக்கி எடுத்த ஆயிரம் குதிரை வீரர்களுடன் புள்ளலூர்ப் போர்க்களத்துக்கு வந்து சேர்ந்தார். எதிர்பாராத இடத்தில் எதிர்பாராத சமயத்தில் வந்து தாக்கியபடியால், கங்கர் படை பீதியடைந்து ஓடலாயிற்று. புதிதாக வந்த குதிரைப் படைத் தலைவன் வஜ்ரபாகுவை மாமல்லர் சந்தித்த போது, அந்த வீரன்தான் தம் தந்தையென்று அறிந்தார். அதனால் அவருடைய ஆத்திரம் அதிகமாயிற்று. இந்த ஒரு போரிலாவது தம்மை முழுதும் நம்பி விட்டுவிடக் கூடாதா என்று தந்தையிடம் சண்டை பிடித்த பிறகு, சிதறி ஓடும் கங்கர் படையைத் துரத்திச் சென்று நிர்மூலமாக்க அனுமதி கேட்டார். ஒரு நிபந்தனையுடன் சக்கரவர்த்தி அதற்கு அனுமதி கொடுத்தார். அந்த நிபந்தனை என்னவென்றால், 'தென்பெண்ணை நதி வரையில் எதிரிகளைத் துரத்திச் செல்லலாம்; நதியைக் கடந்து அப்பால் போகக் கூடாது' என்பதுதான்.

எதிரிகளைத் துரத்திச் செல்லும்படி மாமல்லரைத் தென் திசைக்கு அனுப்பி விட்டு மகேந்திரர் திரும்பிப் போய் விடவில்லையென்பதைச் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம். நாகநந்தியின் கொடூரச் சூழ்ச்சிகளை எதிர்ப்பதற்குக் கள்ளங் கபடமற்ற இளம் பிள்ளையான மாமல்லரையே நம்பி விட்டு விட முடியுமா?

குண்டோதரனுக்கு எச்சரிக்கை செய்து விட்டுக் கிளம்பிய மகேந்திர பல்லவர், இருட்டையும் புயலையும் பெரு மழையையும் பொருட்படுத்தாமல் தென்கிழக்குத் திசையை நோக்கிச் சென்றார். உதயமாவதற்கு ஒரு ஜாமம் இருக்கும் போது, தென்பெண்ணை நதிக் கரையை அடைந்தார். அப்போது மழையின் வேகம் குறைந்து வானத்தில் மேகங்கள் கலைந்து நட்சத்திரங்கள் கூடத் தெரிந்தன. அந்த இலேசான வெளிச்சத்தில் நதியும் நதிக் கரையும் அப்போது அளித்த காட்சியை வர்ணிப்பது இயலாத காரியம். நதியின் இரு கரையையும் தொட்டுக் கொண்டு 'ஹோ' என்ற இரைச்சலுடன் நொங்கும் நுரையுமாகப் பிரவாகம் போய்க் கொண்டிருந்தது. நேற்று அல்லது முந்தைய தினமாயிருந்தால் அத்தகைய பெரும் பிரவாகம் கூடச் சற்றுத் தூரத்திலிருந்த பார்வைக்குத் தெரிந்திராது. அடர்ந்த தோப்புக்களினால் அது மறைக்கப் பட்டிருக்கும். ஆனால் இப்போது நதிக்கரையில் நெருங்கி வளர்ந்திருந்த அவ்வளவு விருட்சங்களும் முறிந்து விழுந்து கிடந்தன!

மகேந்திரர் நதிக்கரையை நெருங்கியதும், முறிந்து விழுந்து கிடந்த மரங்களுக்கு மத்தியிலிருந்து குதிரை ஒன்று வெளியே வந்தது. அதன் மேல் இருந்தவன் சத்ருக்னன்.

"பிரபு! இன்றிரவு நான் பட்ட கவலை என்றைக்கும் பட்டதில்லை. தங்களைத் தனியே அனுப்பிய என்னுடைய அறிவீனத்தை நினைத்து நினைத்து வருத்தப் பட்டுக் கொண்டிருந்தேன். இந்தப் புயலிலும் மழையிலும் தாங்கள் எப்படி வழி கண்டுபிடித்து வந்து சேர்ந்தீர்கள்?" என்றான் சத்ருக்னன்.

"நானும் எத்தனையோ இரவுகளைப் பார்த்திருக்கிறேன், சத்ருக்னா! ஆனால் இன்றைய இரவைப் போன்ற பயங்கரத்தைக் கண்டதில்லை. போகட்டும், நீ இங்கே காத்திருந்ததில் பயன் உண்டா?" என்று மகேந்திர பல்லவர் கேட்டார்.

"ஆம், பிரபு! இங்கேதான் அவர்கள் நதியைக் கடந்து சென்றார்கள்" என்றான் சத்ருக்னன்.

"துர்விநீதன் இருந்தானா? பார்த்தாயா?"

"வெகு சமீபத்தில் நின்று பார்த்தேன். துர்விநீதன் யானை மீதிருந்தான். மற்றவர்கள் ஏழெட்டுப் படகுகளில் சென்றார்கள். அப்போது புயல் ஆரம்பிக்கவில்லை. கிட்டத்தட்ட அவர்கள் அக்கரையை அடைந்தபோதுதான் காற்று ஆரம்பித்தது. கரை ஓரம் போய் விட்டபடியால் தட்டுத் தடுமாறிக் கரையேறி விட்டார்கள். அப்போது நதியில் பிரவாகமும் இவ்வளவு இல்லை."

"நீ சொன்ன இடத்துக்குத்தான் அவர்கள் போயிருக்க வேண்டும். பின்னால் படகு ஒன்றும் விட்டு விட்டுப் போகவில்லையா?"

"ஒரு படகை விட்டுப் போனார்கள். அதை நீங்களும் நானும் எடுத்துக் கொண்டு போய்ப் பிக்ஷுவைத் திண்டாடச் செய்யலாமென்று நினைத்தேன். ஆனால் புயல்

## அருள்வாக்கு



**ப**ணமும் வசதியும் எந்தத் தொழில்காரருக்கும் அதிகம் இருக்கக் கூடாது. இவற்றை விட முக்கியமானது இவை எவற்றை உத்தேசித்து ஏற்பட்டனவோ, ஆனால் இவற்றால் எதை உண்மையில் பெற முடியவில்லையோ, அந்த ஆத்ம திருப்திதான் — மனநிறைவுதான் — மனிதனுக்கு வேண்டியது. திருப்தனாக இருந்தால்தான் ஆனந்தமாக பகவத் தியானம் பண்ண முடியும். அப்படிப்பட்ட மனசில்தான் பரம ஸத்தியமான வஸ்து எதுவோ அது தெரியும். அதனால்தான் நம் சாஸ்திரப்படி ரொம்பவும் எளிய வாழ்க்கையே விதித்திருக்கிறது. ஓரளவுக்கு மேல் ஸௌகர்யங்கள் அதிகமாகி விட்டால் அப்புறம் இந்திரிய ஸுகத்துக்கு மேலான விஷயங்களுக்குப் போகவே முடியாது. அதே மாதிரி, உழைப்பு இல்லாமல், சிரமமே படாமல் ஸுக ஜீவியாக இருந்தாலும் புத்தி கண்டதை நினைத்துக் கெட்டுத்தான் போகும். ஆகையினால் ஆத்மிகமாக உயர வேண்டுமானால் அஸௌகர்யமும் சிரமமும் கடும் உழைப்பும் பேணத்தான் வேண்டும். இவற்றையும் சௌகர்யம் என்றே பாவிக்கிற மனப்பான்மை அப்போதுதானே வரும்?

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

நம்மையும் திண்டாட விட்டுப் படகை அடித்துக் கொண்டு போய் விட்டது!''

''நல்லதாய்ப் போயிற்று, சத்ருக்னா! துர்விநீதனைத் தொடர இப்போது அவகாசமில்லை. அதைவிட முக்கியமான வேலை இருக்கிறது. மாமல்லனும் பரஞ்சோதியும் எங்கே இறங்கியிருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டாயல்லவா?''

''இந்த நதிக்கரையில்தான் கிழக்கே அரை காத தூரத்தில் இருக்கிறார்கள். ஆ! இந்தப் பெரும் புயலில் அவர்கள் என்ன பாடுபட்டார்களோ; தெரியவில்லை!''

''உடனே அவர்கள் இருக்குமிடம் போக வேண்டும். பொழுது விடிவதற்குள் அவர்கள் தென்பெண்ணையைக் கடந்து விட வேண்டும். உன் குதிரையின் உடம்பில் சக்தி இன்னும் இருக்கிறதா, சத்ருக்னா? என் குதிரை ரொம்பவும் தளர்ந்து விட்டது.''

''என் குதிரை இன்னும் போகும் பிரபு! இதன் மேல் ஏறிப் போங்கள், நான் இங்கேயே இருக்கிறேன்.''

''இல்லை, இரண்டு பேருந்தான் போக வேண்டும்....''

''பிக்ஷு இங்கு வந்தால்....?''

''பிக்ஷு இங்கு வர மாட்டார், சத்ருக்னா! நிச்சயமாக இன்னும் சில நாளைக்கு வர மாட்டார்.''

''ஏன் பிரபு?''

''உன் சீடன் குண்டோதரன் அவரைத் தூக்கித் திருப்பாற்கடல் உடைப்பிலே போட்டு விட்டான்!''

''என்ன? என்ன?''

''அதோ அந்தச் சப்தம் உன் காதில் விழுகிறதா, சத்ருக்னா?''

சத்ருக்னன் உற்றுக் கேட்டு விட்டு, ''ஆம் பிரபு! சமுத்திர கோஷம் மாதிரி இருக்கிறது! மறுபடியும் மழையா?'' என்றான்.

''மழைச் சப்தம் அப்படியிராது. திருப்பாற்கடல் உடைத்துக் கொண்டு விட்டது. நாளைப் பொழுது போவதற்குள் வராக நதியிலிருந்து தென்பெண்ணை வரையில் ஒரே பிரளயந்தான்!''

''ஐயையோ! மாமல்லர்....?'' என்று அலறினான் சத்ருக்னன்.

''வா! போகலாம்! மாமல்லனையும் பரஞ்சோதியையும் எச்சரித்துக் காப்பாற்றலாம்!'' என்றார் மகேந்திரர்.

''சுவாமி, குண்டோதரன்?''

''குண்டோதரன் . திருப்பாற்கடல் உடைப்பை அடைக்க முயற்சி செய்தான். அது முடியாத காரியம்; 'ஓடிப் போய் ஆயனரையும் சிவகாமியையும் காப்பாற்று' என்று எச்சரிக்கை செய்து விட்டு வந்தேன். என்ன செய்தானோ?''

''ஆஹா! அவர்கள் வேறு அகப்பட்டுக் கொண்டார்களா? இன்றைக்கு உண்மையிலேயே மிகப் பயங்கரமான இரவுதான்!'' என்று சத்ருக்னன் கூறிக் குதிரையைப் போகும்படி முடுக்கினான்.

''இது பயங்கரமான இரவானாலும் ஒரு பயன் கிடைத்தது சத்ருக்னா! புலிகேசியை



''வாக்காளப் பெருமக்களே, நான் தேர்ந்தெடுக்கப்பட்டால், உங்கள் ஏழு பேருக்காக சட்டமன்றத்தில் சத்தியமாக வாதாடுவேன் என்று உறுதியளிக்கிறேன்...!''

வெல்வதற்கு இன்னொரு ஆயுதத்தைக் கண்டுபிடித்தேன்!'' என்றார் சக்கரவர்த்தி.

''பிரபு தாங்கள் உண்மையிலேயே விசித்திர சித்தர்தான்!'' என்று சத்ருக்னன் வியப்புடன் கூறினான்.

இரு குதிரைகளும் நதிக்கரையோரமாகக் கிழக்குத் திசையை நோக்கிச் சென்றன. வழியெல்லாம் முறிந்து கிடந்த மரங்களைத் தாண்டிப் போவதில் அவர்களுக்கு எவ்வளவோ சிரமம் ஏற்பட்டது. எனினும், பொழுது புலரும் சமயத்தில் அவர்கள் பல்லவ சைனியத்தின் பாசறையை வந்தடைந்தார்கள். அல்லோலகல்லோலமாய்க் கிடந்த அந்தப் பாசறையில் நுழைந்ததும், பல்லவ வீரர்களுக்கெல்லாம் வந்திருப்பவர் மகேந்திர சக்கரவர்த்தி என்பது தெரிந்து விடவே, பலமான ஜயகோஷம் எழுந்தது.

மகேந்திரர், தளபதி பரஞ்சோதியைப் பார்த்தவுடனே, அவருக்குப் பேச இடங்கொடாமல், ''தளபதி! உடனே புறப்பட வேண்டும். இன்னும் ஒரு நாழிகைக்குள் தென்பெண்ணையைக் கடந்து அக்கரை போக வேண்டும். நீந்தத் தெரிந்தவர்கள் நீந்தட்டும். நீந்தத் தெரியாதவர்கள் மரம் மட்டை எதையாவது பிடித்துக் கொள்ளட்டும்! குதிரைகள், யானைகள் எல்லாவற்றையும் ஆற்றில் அடித்து விடுங்கள். ஆயுதங்கள், சாமக்ரியைகள் எது போனாலும் போகட்டும்; மனிதர்கள் பிழைத்தால் போதும்!'' என்றார்.

இந்த விசித்திரமான கட்டளையைக் கேட்டுத் திகைத்து நின்ற பரஞ்சோதியைப் பார்த்து, ''ஓஹோ! காரணம் தெரிய வேண்டுமா? திருப்பாற்கடல் உடைத்துக் கொண்டு விட்டது! அதோ வினாடிக்கு வினாடி அதிகமாகும் கோஷத்தைக் கேளும்; இன்னும் ஒரு ஜாமத்திற்குள்ளே வெள்ளம் இங்கே வந்து விடும்!'' என்றார்.

பரஞ்சோதியின் முகத்தில் அப்போது சொல்ல முடியாத பீதி தோன்றியது. ''பிரபு.... பிரபு!....'' என்று மேலே பேச முடியாமல் அவர் தயங்கி நிற்பதைக் கண்டு, ''என்ன விசேஷம், தளபதி! மாமல்லன் எங்கே?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''நேற்று இருட்டிய பிறகு அசோகபுரத்துக்குப் புறப்பட்டுப் போனார் பிரபு! அங்கே... அங்கே...'' என்று மேலும் சொல்வதற்குப் பரஞ்சோதி தயங்கினார்.

''தெரிந்து கொண்டேன், தளபதி! அசோகபுரத்திலே ஆயனர் இருக்கிறார்; அந்தச் சிற்ப சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்காகக் குமார சக்கரவர்த்தி புறப்பட்டுப் போனார்! நல்லது, மாமல்லனைக் காப்பாற்றும் பொறுப்பு இனி நமக்கு இல்லை; அது ஏகாம்பரநாதனுடைய பொறுப்பு! இங்குள்ள மற்றப் போர் வீரர்களை நாம் காப்பாற்ற முயல்வோம்!'' என்றார் மகேந்திரர்.

மாமல்லரைப் பற்றிய அநாவசியமான கவலை நமது வாசகர்களையும் பீடிக்காமலிருக்கும் பொருட்டு, அச்சமயம் அவர் எங்கே இருந்தார் என்பதைச் சொல்லி விட விரும்புகிறோம்.

கிழக்கு வெளுத்துப் பொழுது புலரத் தொடங்கியிருந்த அந்த நேரத்தில், அசோக புரத்துப் புத்த விஹாரத்தின் அருகில், மாமல்லர் ஏறியிருந்த குதிரையானது பெருகி வந்த எதிர் வெள்ளத்திலே நீந்தித் திணறிக் கொண்டிருந்தது.

விஹாரத்தின் மேல் தளத்திலே ஆயனரும், சிவகாமியும் சிவகாமியின் அத்தையும் நின்று ஆவலுடனும் கவலையுடனும் அவருடைய வருகையை நோக்கிக் கொண்டிருந்தனர். ரதியும் சுகப் பிரம்ம ரிஷியுங்கூட அங்கே காணப்பட்டனர்.

அதே சமயத்தில் நீர் சூழ்ந்த புத்த விஹாரத்தின் ஓரமாகப் பானைத் தெப்பத்தில் குண்டோதரன் வந்து கொண்டிருந்தான்.

வீதியிலும் மற்றும் சுற்றுப்புறமெங்கும் வெள்ளம் சுழித்துக் கொம்மாளமிட்டு அதிவேகமாக ஓடிக் கொண்டிருந்ததுடன் கணத்துக்குக் கணம் பெருகிக் கொண்டுமிருந்தது.

(தொடரும்)



# இருட்டில் துப்பறிய வெளிச்சத்துக்கு வரும் உண்மைகள்

"என் கணவரின் மரணம் எனக்குச் சந்தேகத்தை அளிக்கிறது. தூக்கில் தொங்கி தற்கொலை. செய்து கொள்ளுமளவுக்கு அவருக்கு மன உளைச்சல் இருந்ததில்லை. குடும்பத்திலும் சரி, வியாபாரத்திலும் சரி, அவர் இந்த முடிவைத் தேடிக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதில்லை. இது ஒரு கொலை. நான் அப்படித்தான் நம்புகிறேன். நீங்கள் எனக்காகத் துப்பறிந்து விவரம் சேகரிக்க வேண்டும்."

— நடுத்தர வயதைக் கடந்த ஒரு பெண் மணி, கண்களில் ஆவேசம் தெறிக்க, குரலில் மட்டும் நிதானத்தை மேற்கொண்டு முறையிட்டாள்.

முறையிட்டது...

குளோப் டிடெக்டிவ் பிரைவேட் ஏஜென்ஸி நிறுவனத்தின் நிர்வாகி பெஞ்சமின் தியாகராஜிடம்.

தாம் முயற்சி செய்து விவரங்களைச் சேகரிப்பதாக அவர் உறுதியளித்தார். ஆனால் தாமும் தமது குழுவினரும் கண்டு பிடிக்கும் விவரங்கள் சட்டரீதியான ஆவணங்கள் ஆகாது என்பதைத் தெளிவாக எடுத்துரைத்தார்.

"நாங்கள் உங்களிடம் சமர்ப்பிக்கும் அறிக்கை நீதிமன்றத்தில் ஆதாரமாக வைக்க அங்கீகாரம் பெற்றதல்ல. நாங்கள் துப்பு துலக்கியதன் அடிப்படையில் காவல் துறையை அணுகி, அவர்கள் மூலமாகக் குற்றவாளியைக் கண்டுபிடிக்க வேண்டியது உங்கள் பொறுப்பு. போலீஸ் நடைமுறையில் நாங்கள் குறுக்கிடவோ, ஆலோசனை சொல்லவோ முடியாது."

பெஞ்சமின் கூறியதை அந்தப் பெண்மணி ஏற்க, துப்பறிந்ததில், அந்தப் பெண்மணி சந்தேகித்தது சரி என்பது தெரியவந்தது. நாளடைவில் குற்றவாளி போலீஸாரால் கைது செய்யப்பட்டு நீதி விசாரணைக்கு உள்ளாகி தண்டனை பெற்றார்.

குளோப் தலைமை அலுவலகம் டெல்லியில் இயங்குகிறது. நாடெங்கிலும் மொத்தம் பதினைந்து கிளைகள். நிறுவனத்தின் பெயருக்கேற்றார் போல சர்வதேச போலீஸ் நிறுவனத்துக்கும் 'குளோப்' ஸ்தாபகர் பிரேம்குமார் தகவல்கள் கொடுத்து உதவியிருக்கிறார்.

திருமணத்திற்கு முன்பு, மணமகன், மணமகள் பற்றிய விவரங்களைச் சேகரித்துத் தந்து, பல அப்பாவிப் பெண்களின் வாழ்க்கையைக் காப்பாற்றியிருக்கிறது குளோப். அதே போல திருமணத்திற்குப் பிறகு ஏற்படக்கூடிய சந்தேகச் சிக்கல்களையும் நீக்கிவிட்டிருக்கிறது!

"என் கணவரின் நடத்தை எனக்குச்






''தட, தட, தடா!'' இது என்ன?
பெரியார் மாவட்டம் புஞ்சை புளியம்பட்டியில் உள்ள ஒரு காயலான் கடையின் விநோதமான பெயர்!

— நாகை. கே. ரவி.

சந்தேகத்தைத் தருகிறது. மாலையில் அலுவலகம் விட்டு அவர் நேரடியாக வீட்டிற்கு வருவதே இல்லை. தினமும் லேட்டு தான். வேறொரு பெண்ணுடன் அவர் தொடர்பு வைத்திருக்கிறாரா என்று துப்பறிந்து தகவல் தாருங்கள்'' என்று கேட்டுக் கொண்டார் ஒரு பெண்மணி!

'குளோப்' கணவரின் பின்னால் தன்னுடைய துப்பறியும் கண்களைப் படர விட்டது. கணவர் மாலையில் அலுவலகம் விட்டதும் நேராகத் தாம் உறுப்பினராக இருக்கும் ஒரு 'கிளப்'பிற்குச் சென்று, அங்குள்ள மது அருந்தும் பிரிவுக்குப் போகிறார். அங்கே உள்ள சில நண்பர்களிடம் அன்றையத் தமது அலுவலகக் கெடுபிடிகள், சோதனைகள், வேதனைகளை வாய் விட்டுப் புலம்பி, அவர்களுடைய யோசனைகளையும் ஆறுதலையும் பெறுகிறார். மனம் ஒருநிலைப்பட்ட பிறகு வீட்டிற்குத் திரும்புகிறார். மற்றபடி இன்னொரு பெண்ணிடம் அவர் சகவாசம் வைத்துக் கொண்டிருக்கிறார் என்பதற்கு எந்தவித ஆதாரமுமில்லை என்ற உண்மையைக் கண்டுபிடித்தது. இதை அந்தப் பெண்மணியிடம் தெரிவித்த போது, அவள் நம்பவில்லை. மீண்டும் ஒருமுறை வேவு பார்க்கச் சொன்னாள்! இரண்டாம் முறையும் அதே உண்மைகள்தான் கிடைத்தன. அந்தப் பெண்மணி, மனநிம்மதி பெற்று, கணவரை விவாகரத்து செய்ய நினைத்திருந்த எண்ணத்தைக் கைவிட்டாள்! அது மட்டுமல்ல; கணவனின் அலுவலகப் பிரச்னைகளில் அனுதாபம் காட்டி ஆறுதலும் கூறுகிறாள். கணவர் இப்போது கிளப்புக்குப் போவதே கிடையாது. அவருக்குத் தேவைப்படும் ஆறுதல் வீட்டிலேயே கிடைக்கிறதே! சந்தோஷமாய் இருக்கிறார்கள்!

**க**ல்லூரியில் படிக்கும் தன் மகன் அல்லது மகளுடைய நடத்தையில் சந்தேகம் கொண்டு கண்காணிக்கச் சொல்லும் பெற்றோர்களும் உண்டு. மகன் போதைப் பொருள் பயன்படுத்துவது துப்பறியும் நிறுவனம் மூலமாகத் தெரிந்த பிறகு, பெற்றோர்கள் தாமதிக்காமல் உளவியல் நிபுணரைக் கலந்தாலோசித்து அவனுடைய தீய பழக்கத்தை அழித்தொழித்திருக்கிறார்கள்!

இன்சூரன்ஸ் தொகை கோரி வரும் விண்ணப்பங்களில் பல போலியானவை என்பதை குளோப் கண்டுபிடித்திருக்கிறது. முற்றிலும் எரிந்து போய் விட்டதாகக் கூறப்பட்ட வாகனம் ஒன்று அவ்வாறு நாசமடையவில்லை; ஒளித்து வைக்கப்பட்டிருக்கிறது என்பதை அம்பலப்படுத்தியது! அதே போல பெரிய தொகைக்கு இன்சூர் செய்யப்பட்ட ஓர் அரிய பொருள், போக்குவரத்தில் திடீரெனக் 'காணாமல் போய்' விட்ட மர்மம், ஒரு கும்பலின் இட்டமிட்ட கூட்டுத் திருட்டே என்பதைக் கண்டறிந்தது!

**ஒ**ரு நிறுவனம் புதிய தயாரிப்பைப் பொது மக்களுக்கு அறிமுகப்படுத்துவதற்கு முன், சந்தையில் அதற்கு எப்படிப்பட்ட வரவேற்பு இருக்கும், அதே மாதிரியான இன்னொரு நிறுவனத்தின் தயாரிப்புக்குச் சவால் விட முடியுமா, அத்துடன் விற்பனையில் போட்டி போட முடியுமா என்பது போன்ற பல 'மார்க்கெட் நிலவரங்களையும் துப்பறிந்து தருகிறது குளோப்.

ஒரு நிறுவனத்தில் புதிதாக வேலைக்குச் சேருபவர் பற்றிய விவரங்கள் அனைத்தையும் அலசி ஆராய்ந்து அறிக்கை அளிக்கிறது.

டிரேட் மார்க் விதிகளை மீறும் போலி நிறுவனங்கள், சிறு தொகைக்குப் பெரிய பரிசுகளை வழங்கும் மோசடி கும்பல், கடத்தல்காரர்கள் என்று பலவித குற்றவாளிகளையும் கண்டுபிடித்து உதவுகிறது. சமூக விரோத நோக்குடன் துப்பறியச் சொல்லிக் கேட்பவர்களுக்கு மட்டும் உதவுவது கிடையாது.

**"எ**ங்களுக்குப் போலீஸாரின் உதவி பெருமளவில் கிடைக்கிறது. இன்ன இடத்தில் இன்ன மோசடி. அதைக் கண்டுபிடிக்கத் திட்டமிட்டிருக்கிறோம்; உங்கள் உதவி தேவை'' என்று சட்டரீதியான நுணுக்கங்களில் அவர்களுடைய உதவியை நாங்கள் நாட, அவர்களும் முழு மனத்துடன் ஒத்துழைப்பு தருகிறார்கள்'' என்றார் பெஞ்சமின்.

''உங்களை ஒரு புகைப்படம் எடுத்துக் கொள்கிறோம்'' என்று கேட்ட போது,

''வேண்டாம் சார், ப்ளீஸ்'' என மறுத்தார் அவர். ''நாங்கள் இருட்டிலிருக்கும் உண்மைகளை வெளிச்சத்திற்குக் கொண்டு வருவதற்குப் பல உருவங்களில் வளைய வர வேண்டியிருக்கிறது; பல பெயர்களில் உலவ வேண்டியிருக்கிறது. என் புகைப்படம் பிரசுரிக்கப்படுமானால், என்னை அடையாளம் தெரிந்து கொள்ளும் கல்கி வாசகர்கள், நான் முக்கியமான பணியில் ஈடுபட்டிருக்கும் போது, 'நீங்க.. பெஞ்சமின் தானே?' என்று கேட்டு விட்டால், போச்சு! காரியம் கெட்டுப் போகும்'' என்றார்.

பேட்டி: **பிரபுசங்கர்**

வாசகர் யோசனை: தோ. திருச்சி — 18.






நீங்கள் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா?
ஓரளவு கல்வித்தகுதியிருந்தும், உங்களால் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசமுடியவில்லையா?

ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மையினால் உங்களது முன்னேற்றம் தடைபடுகிறதா?
மற்றவர்கள் பேசுவதை ஓரளவு புரிந்து கொண்டாலும், அவர்களிடம் ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்று தயக்கமாக இருக்கிறதா?

ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற ஆர்வத்தில் பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றம் ஏற்படவில்லையே என்று வேதனைப்படுகிறீர்களா?
கவலையை விடுங்கள்.....

இதோ ஒரு பயனுள்ள பயிற்சி முறை உங்களுக்காக.
தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளிக்கும் ஓர் எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற்கொண்டால் தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாடவும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுதவும் உங்களால் முடியும்.
வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் நீங்கள் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.
நேர்முகப்பயிற்சி பெற விரும்புவோருக்கு தனிவகுப்புகள் நடத்தப்படுகின்றன.
இப்பயிற்சியில் சேர்ந்து பயன் பெற வேண்டும் என்ற உங்களதுவிருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி கீழ்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்.
இப்பயிற்சியில் சேருவதற்கான விண்ணப்ப மனுவையும், மற்ற விவரங்களையும் உடனே அனுப்பி வைக்கிறோம்.

ஆங்கிலத்தில் பேச வேண்டும், வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் நிறைவேற இன்றே உங்களது முயற்சி துவங்கட்டும்.
நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
தபால் பெட்டி எண். 4986
9, நடேசன் தெரு, தி.நகர்,
சென்னை — 600 017.
தொலைபேசி எண். 44 12 16

---

**நமது கல்வி நிலையத்திற்கு சென்னையைத் தவிர வேறு ஊர்களில் கிளைகள் எதுவும் கிடையாது.**

# உறுத்தல்

'காலையில் அந்தக் கல்யாணத்திற்குப் பாரதியுடன் போயிருந்திருக்கக் கூடாது!' — இப்படி உள்ளுக்குள் நொந்து கொண்டான் மாதவன்.

அப்படிப் பார்த்தால் நீயும் அவளும் எங்குமே சேர்ந்து போகக் கூடாதுதான். அதெல்லாம் நடக்கிற காரியமா?' அவனுக்குள்ளேயே பிறந்த இந்த எதிர்க் கேள்விக்குப் பதில் தெரியாமல் சங்கடமாய் நெளிந்து கொண்டான்.

இன்று காலை நெருங்கிய உறவினர் திருமணம். பெரிய கோவில் மங்கள நாயகி திருமண மண்டபத்தில்.

மண்டபம் வரை அவனும் அவளும் குழந்தை மஞ்சுவைத் தூக்கிக் கொண்டு சிரித்துப் பேசியபடிதான் சென்றனர். மண்டப வாசலில் இவர்களை முந்திக் கொண்டு 'புரு...புரு'வென்று ஒரு புல்லட். அதிலிருந்து அமர்த்தலாய் இறங்கிய ஓர் இளைஞன். அவன் தோளைத் தொற்றிக் கொண்டு அவனது இளந்துணை. கலகலத்தபடி அவர்கள் உள்ளே நுழைந்து மறைந்த பிறகு பாரதியின் கலகலப்பும் மறைந்து போயிற்று.

எதையோ பறிகொடுத்ததைப் போல் அவளது அழகான முகம் உம்மணாம் மூஞ்சியாகி விட்டது. மாதவனிடமோ குழந்தையிடமோ ஒரு வார்த்தை பேசவில்லை. கல்யாணம் முடிந்து வீட்டுக்கு வந்து இரவு இந் நேரமாகியும் அவளிடம் கனத்த மௌனம்தான்.

'இந்த' பாரதி இதுவரை அவன் பார்த்திராதவள். அவள் இப்படியானதின் காரணத்தை ஓரளவு அவனாலும் அனுமானிக்க முடிந்தது. அந்த அனுமானமே அவனையும் உறுத்தத் தொடங்க, அவனுக்கும் அந்த 'மௌனம் தேவைப்பட்டது.

ச்சேச்சே... மனசுக்குள்தான் புழுக்கம் என்றால் வெளியிலுமா இப்படி?

வீட்டுக்குள் கிடந்த பிரம்பு நாற்காலியை எடுத்து வந்து, வாசலில் பூச் செடிகளுக்கு மத்தியில், சிமெண்ட் முற்றத்தில் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான்.

இந்தக் காற்றுக்கு என்ன ஆயிற்று? வைகாசி பிறந்ததுமே தென்றலின் குழந்தைத்தனத்தை மாற்றிக் கொண்டு, மேற்கிலிருந்து முரட்டு வாலிப குணத்துடன் மூர்க்கமாய் வீசிக் கொண்டிருக்குமே இன்றைக்குப் பார்த்து அதுவும் அல்லவா மௌனவிரதம் இருக்கிறது.

அவன் சலிப்புடன் அண்ணாந்து பார்த்தான். உச்சி வானில் நிலவு, சுற்றிலும் செதில் செதிலான மேகத் துணுக்குகளுடன் நிச்சலனமாய் மாதவனையே பார்த்துக் கொண்டிருந்தது.

அவனருகில் லேசான சலனம். நிமிர்ந்து பார்த்தான்.

பாரதி.

சரேலென மடிந்து அவன் காலடியில் அமர்ந்தாள். அவன் மடியில் முகம் புதைத்துக் கொண்டாள்.

நாள் முழுதும் கனத்துப் போயிருந்த அவனது மனம் சட்டென்று லேசாகியது. அவனறியாமலே அவனது கை, அவளது உச்சந்தலை, கன்னம் என்று வருடிக் கொடுத்தது. அந்த இதமான வருடல் அவளுக்கும் தேவைப்பட்டிருக்கும் போலிருந்தது.

அவனது விரல்கள் அவளது கன்னப் பிரதேசத்தில் ஈரத்தை ஸ்பரிசித்ததும் அவன் திடுக்கிட்டான். "பாரதி..." என்று பதற்றப்பட்டான்.

"ஹூம்..." என்ற பதில் அழுகையால் நடுங்கிற்று.

சடாரென்று அவளது முகத்தை நிமிர்த்தினான். அவளது சிரிக்கும் கண்கள் இரண்டும் நீரில் தத்தளித்துக் கொண்டிருந்தன.

"ச்சுச்சு... என்னடாது... எதுக்காக இப்படி...?" இவனது தவிப்பு அவளை இன்னும் கொஞ்சம் குலுங்க வைத்தது.

இவன் புரிந்து கொண்டான். 'அழட்டும். அப்போதுதான் சுமை இறங்கும்' என்று பொறுமை காத்தான்.

பாரதி எழுந்து அவனுக்கு நேராக உட்கார்ந்து கொண்டாள். முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டாள். பிறகு கேட்டாள்.

"எம் மேலே உங்களுக்குக் கோபம் தானே?"

"கோபமா... எதற்காக?"

"இன்னைக்குப் பூரா உங்ககூட நான் பேசவே இல்லையே!"

"அதற்காகவா...?" என்று சிரித்துக் கொண்டவன் தொடர்ந்து சொன்னான்.

**உத்தமசோழன்**

''உன்னைப் பத்தி எனக்குத் தெரியாதா? உம் மனசிலே ஏதோ காயம் பட்டிருக்குன்னு தெரிஞ்சு போச்சு. எதுவாயிருந்தாலும் கடைசியிலே மருந்து போடுங்கன்னு எங்கிட்டேதான் வருவேன்னும் எனக்குத் தெரியும். வரட்டுமேன்னு நானும் பொறுமையாயிருந்தேன். அதைத் தவிர கோபமெல்லாம் ஒண்ணுமில்லே...

அவள் சிலிர்த்துக் கொண்டதை அவனால் உணர முடிந்தது. சிறிது நேரம் தயக்கமாய்க் கழிந்தது.

''காலையிலே கோவில் வாசல்கிட்டே நாம போய்க்கிட்டிருந்தப்போ நம்மை முந்திக்கிட்டு ஒரு புல்லட் வந்து நின்னிச்சில்லே. அதிலிருந்து ஒரு இளஞ் ஜோடி இறங்கிச்சே...?''

''ஆமா...''

''அப்ப அந்தப் பொண்ணு செஞ்சதை நீங்க கவனிச்சீங்களோ என்னமோ... ஏதோ அவளுக்கு.. யாருக்கும் கிடைக்காத புருஷன் கிடைச்சிட்ட மாதிரியும் அதை இந்த ஊரு உலகத்திலே உள்ளவங்க பார்க்கணுங்கிற மாதிரியும், அவனால் நடக்க முடியாதது மாதிரியும், அவன் தோளில் தொங்காத குறையாத்தான் நடந்து போனாள். ஆனாப் பாருங்க... அவளோட அத்தனை தொல்லைகளுக்கும் அந்தப் பையன் கொஞ்சமாவது தடுமாறணுமே. என்ன கம்பீரமா சும்மா... டக்.. டக்னு நடந்து போனான் பாத்தீங்களா? நெஜமாச் சொல்றேன். என் வயசுக்கு இப்படி ஒரு மிடுக்கு நடை நடக்கிறவனை நான் பார்த்ததே இல்லீங்க. அந்த பிரமிப்பிலே இருந்த நான் என்னை அறியாமலே அவங்க பின்னாடி போறதை நிறுத்திட்டு, திமுருன்னு திரும்பி, பின்னாடி வந்துக்கிட்டிருந்த உங்களைப் பார்த்தப்போ..''

மேற்கொண்டு சொல்ல முடியாமல் தலை கவிழ்ந்து கொண்டாள்.

ஆனால் அவனோ சட்டென்று தொடர்ந்தான்.

''...நீ என்னைப் பாத்தப்போ ரெண்டு பக்கமும் 'எஸ்' மாதிரி வளைஞ்சு போன கால்களால், வாத்து மாதிரி வலமும் இடமுமாக ஆடி ஆடி வந்துக்கிட்டிருப்பேன். அதைப் பார்த்ததும் உன் மனசு ஒடிஞ்சு போயிருக்கும். அந்த நிலையிலே யாராயிருந்தாலும் அப்படித்தான் ஆகும்..''

அவனது நிச்சலனம் அவளை ஆச்சரியப்



## ப்ளீஸ், பாராட்டத் தெரிந்து கொள்ளுங்களேன்! — ஆண்களுக்கு

## கோலப் போட்டியில் ஆறுதல் பரிசு பெற்ற கோலங்கள்

## வஸந்த நீர் — கோடைக்கு

படுத்தினாலும், தான் ஏதோ செய்யக் கூடாத தவறைச் செய்து விட்டதைப் போல் கூனிக் குறுகிப் போயிருந்தாள்.

"பாரதி...! சித்த முன்னாடி எங்கிட்ட என்ன கேட்டே? கோபமான்னுதானே! இல்லே. வருத்தம். எம்மேலயேதான்!"

புரியாதவளாய் அவனை நிமிர்ந்து பார்த்தாள் பாரதி.

"புரியலையா? சொல்றேன்..."

அவன் படித்து, ஊனமுற்றோர் ஒதுக்கீட்டில் வேலை கிடைத்ததும் 'எனக்குப் பிறகு உனக்குன்னு ஒரு துணை வேண்டாமான்னு' அம்மா கல்யாணப் பேச்சை ஆரம்பித்ததும், 'இதப் பாரும்மா! நீ வேணும்னா பெத்த கடனுக்காக என்னைச் சகிச்சுக்கிட்டிருக்கலாம். ஆனால் சம்பந்தமில்லாத இன்னொருத்தி காலமெல்லாம் என்னோட கஷ்டப்படணுங்கிறதை நான் ஒத்துக்க மாட்டேன். இனிமே கல்யாணப் பேச்சை எடுத்தே... எனக்குக் கெட்ட கோபம் வரும்!' என்று தடை போட்டது;

பாரதியின் அப்பா யார் மூலமாகவோ கேள்விப்பட்டு, அவன் அம்மாவிடம் வந்து, தனது இயலாமையைக் கூறித் தனது மகளை மருமகளாக்கிக் கொள்ள வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தது;

பொறுமை இழந்து போன அம்மா, 'என்னடா நீ விநோதமான பிள்ளையா இருக்கே... பொண்ணும், பொண்ணைப் பெத்த அப்பாவுமே எங்களுக்கு மனப் பூர்வமா சம்மதம்னு திரும்பத் திரும்பச் சொல்றப்போ, நீ என்னமோ தத்துவம் பேசிக்கிட்டிருக்கியே...' என்று சண்டை போட்டது;

'நான் பெண்ணைப் பார்க்க வேண்டாமா?' என்று பாரதியின் வீட்டுக்குப் போனது வரை விவரமாகச் சொல்லி விட்டுச் சொன்னான்...

"நான் உங்க வீட்டுக்கு வந்தது எதுக்குத் தெரியுமா? உன்னைப் பெண் பார்க்கவா? இல்லே. உங்க அப்பாவைப் பார்த்து 'உங்களால சீர்வரிசை செஞ்சு நல்ல மாப்பிள்ளைக்குக் கல்யாணம் செஞ்சு குடுக்க முடியலேங்கிறதுக்காக, என்னை மாதிரி ஆளுங்களுக்குக் கொடுத்தா, அந்தப் பொண்ணு மனசு எவ்வளவு கஷ்டப்படும்? அதனாலே நீங்களும் உங்க பொண்ணும் ஒத்துக்கிட்டாலும் நான் ஒத்துக்க மாட்டேன். இனிமே கல்யாணப் பேச்சைப் பேசிக்கிட்டு எங்க வீட்டுப் பக்கம் வரக் கூடாதுன்னு' கண்டிச்சுட்டு வரத்தான்..."

"......"

"ஆனா உங்க வீட்டுக்குள்ளே நுழைஞ்சதும் முதல்லே எங்கண்ணிலே பட்டது நீதான். உன்னோட அழகைப் பார்த்ததும் நிமிஷத்திலே தடுமாறிப் போயிட்டேன். அவ்வளவுதான்... நான் சொல்ல நினைச்சது மறந்து போச்சு. 'அவங்களே சம்மதிக்கிறப்போ நமக்கென்ன'ன்னு நானும் சமாதானப்படுத்திக்கிட்டேன். அப்புறமென்ன... நீ இந்த வீட்டுக்கு மருமகளா வந்திட்டே..."

"........"

"அன்னைக்கு நான் தடுமாறாம இருந்திருந்தா, உம் மனசிலே இன்னைக்கு வந்த இந்தச் சங்கடம் உனக்கு வந்திருக்காது. அதைப் பார்த்துச் சங்கடப்பட வேண்டியது எனக்கும் வந்திருக்காது.. ப்ச... என்ன பண்றது.. நாமெல்லாம் சாதாரண மனுஷங்கதானே..."

மீண்டும் அவள் அவன் மடியில் முகம் புதைத்துக் கொண்டாள்.




பரிசு

ரூ. 40,000

# கல்கி பொன்விழா நாவல் போட்டி

| | |
|---|---|
| சரித்திர நாவலுக்குப் பரிசு (சுமார் 52 இதழ்கள்) | ரூ. 20,000/— |
| சமூக நாவலுக்குப் பரிசு (சுமார் 26 இதழ்கள்) | ரூ. 10,000/— |
| மர்ம நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/— |
| விஞ்ஞான நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/— |

முடிவு தேதி: ஆகஸ்டு 31, 1991

- இதற்கடுத்த பத்து மாதங்களில் நாவல்களின் பரிசீலனை முடிந்து கல்கி பொன்விழாச் சிறப்பிதழில் முடிவு வெளியாகும். பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்று அதே சிறப்பிதழில் ஆரம்பமாகும். அதாவது 1992 ஆகஸ்டு முதல் வார இதழ்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படும் இதர நாவல்களுக்கு வழக்கமான சன்மானம் அளிக்கப்படும்.
- நடுவர் குழு நாவல்களைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய நாவல்களைத் தேர்ந்தெடுக்கும்.
- கல்கி பொன் விழா நாவல் போட்டிக்கு அனுப்பப்படுவதாகத் தெளிவாகக் குறிப்பிடுதல் அவசியம்.
- பிரதி வாரமும் படத்துடன் சேர்த்துக் கல்கியில் 4 — 5 பக்கங்களுக்கு மேற்படாதபடி அத்தியாயங்களின் அளவை நிர்ணயிப்பது நல்லது.
- கடிதப் போக்குவரத்து கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலைகள் இணைக்க வேண்டும்.
- அப்படித் திருப்பி அனுப்பவே அவசியம் நேராதபடி அற்புதமான நாவல்களை எழுதி அனுப்பிக் கல்கி பொன்விழா ஆண்டினைச் சிறப்பிக்குமாறு எழுத்தாளர் பெருமக்களை வேண்டுகிறோம்.

— ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.

# ஆகாசத்

போன் ஒலித்தது.

சந்தியா எடுத்தாள்.

''துருவ் ஹியர். ஐ வான்ட் டு ஸீ யூ... எப்பொ பார்க்க முடியும்?

சந்தியா திடுக்கிட்டாள்.

எதற்குப் பார்க்க விரும்புகிறான்? இவ்வாறு அவன் கேட்டது, அவன் இயல்புக்குப் பொருந்துவதாக இல்லை. என்ன பிரச்னை?

''முக்கியமான விஷயமோ...?'' என்றாள் சந்தியா.

அவன் சில விநாடி தயங்கிய பிறகு சொன்னான்.

''எஸ். அன்ட் நோ...''

''அப்படின்னா?''

''முக்கியமான விஷயமாயிருக்கலாம், இல்லாமலியுமிருக்கலாம், எனக்குத் தீர்மானமா சொல்லத் தெரியலே.''

''எதைப் பத்தி?''

''உனக்கு நேரமில்லேன்னா, வேணாம், லீவ் இட்.''

''ஓ.கே... எங்கேருந்து பேசறீங்க? வீட்டிலிருந்தா?''

''ஆமாம்.''

''ஐ வில் பி தேர்... கிவ் மீ... ஸே... அரை மணியிலே வரேன்...''

சந்தியா போன போது, துருவ் 'பால்கனி'யில் கைகளைக் கட்டிக் கொண்டு ஆகாயத்தைப் பார்த்தவாறு நின்றான்.

சந்தியா வரும் செருப்போசை கேட்டுத் திரும்பினான்.

''என்ன விஷயம்?'' என்றாள் சந்தியா.

''எல்லாருக்கும் என்னாலே தொந்தரவா?'' என்று கேட்டான் துருவ்.

''புரியலே.''

''அம்மா இன்னிக்குக் காலம்பற என்கிட்டே கத்தின மாதிரி கத்தினதே கிடையாது. என்னைத் தெரிஞ்சவாளுக்கெல்லாம் என்னாலே கஷ்டத்தைத் தவிர வேறொண்ணும் கிடையாதுன்னு சொன்னா. இஸ் இட் ட்ரூ?''

சந்தியா பதில் கூறவில்லை.

''பர்ஹாப்ஸ், யு அக்ரி'' என்று கூறியவாறு, மோவாயை இடக்கையினால் பற்றிக் கொண்டு தரையை நோக்கினான் துருவ்.

''நீங்க என்ன நினைக்கறீங்க?'' என்று வினவினாள் சந்தியா.

''எதெப் பத்தி?''

''உங்களைப் பத்தி...''

''ஐ டோன்ட் நோ,'' என்று தோள்களைக் குலுக்கினான் துருவ்.

''உங்கம்மாவைப் பத்தி நீங்க என்ன நினைக்கறீங்க?''

''ஷி ஈஸ் சேவிங் மணி... பண வேட்டை தான் அவளுடைய முழு நேர வேலை.''

''ஏன்?''

''ஏன்னா?'' என்று குரலில் சிறிது எரிச்சல் தோன்றக் கேட்டான் துருவ்.

''உங்கம்மாவுக்குத் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளக்கூடிய ஏதாவது வீட்டுச் சூழ்நிலை இருந்தா, அவருக்குப் பணத்தைத் தேடறது ஒரு முழு நேர வேலையா இருந்திருக்காது. ஒரு அம்மாவுக்கு அப்படிப்பட்ட சூழ்நிலையை உருவாக்கித் தர்றது பிள்ளையோட பொறுப்பு. அந்தச் சூழ்நிலை இல்லேங்கிற நிலையிலே அவராலே வேற என்ன செய்ய முடியும்?''

துருவ் மௌனமாக அவளைச் சிறிது நேரம் பார்த்தான்.

''நான் சொல்லறது உங்களுக்குப் பிடிக்காமே இருக்கலாம். ஆனா இதுதான் உண்மை.''

''நீ இந்த மாதிரி ஒரு வீட்டுச் சூழ்நிலையை உங்கப்பாவுக்கு உருவாக்கித் தந்திருக்கியா? அப்படியிருந்தா அவர் ஏன் இப்படிக் குடிக்கணும்? பணம் தேடறதுக்கும், குடிக்கிறதுக்கும் வித்தியாசமிருக்கிறதா எனக்குத் தெரியலே.''



இந்திரா பார்த்தசாரதி

# தாமரை

## 17

சந்தியா இதை அவனிடமிருந்து எதிர்பார்க்கவில்லை. சில விநாடிகள் மௌனமாக இருந்து விட்டுச் சொன்னாள்.. "ஒரு வேளை இதுக்கும் நீங்கதான் காரணமா இருக்கலாம்...

"நானா? புரியலே."

"புரியாட்டா பரவாயில்லே... உங்கம்மாவைப் பத்திப் பேசத்தான் என்னைக் கூப்பிட்டீங்களா?"

"இல்லே, என்னைப் பத்தி."

"உங்களைப் பத்தி நீங்க மத்தவர்களோட விவாதிக்க விரும்பறதே, நீங்க அவர்களுக்குக் கொடுக்கிற சலுகைன்னு நெனைக்கிறீங்களா?"

"நீ என்னைக் கர்வம் பிடிச்சவன்னு நெனைச்சா அது தப்பு... எனக்குக் கர்வமே கிடையாது. மத்தவர்களோட ஒருவன் தன்னை ஒப்பிட்டுப் பாக்கிற போதுதான் அவனுக்குக் கர்வமோ, தாழ்வு மனப்பான்மையோ ஏற்படும். நான் அப்படி ஒப்பிட்டுப் பார்த்ததே கிடையாது. அப்படி ஒப்பிட்டுப் பார்க்கவும் எனக்குத் தோணினதே இல்லே... ஏன் நான் இப்படி இருக்கேன்னு எனக்கே புரியலே. எனக்கு என்ன வேணும்னு எனக்கே தெரியலே... தெரிஞ்சுட்டா, அதுதான் என் முடிவோன்னு பயமுமிருக்கு.. உங்கப்பா நெனைக்கிற மாதிரி நான் ஒரு 'மென்டலி ஸிக் பர்ஸனா'கவுமிருக்கலாம்... ஐ டோன்ட் நோ."

இவ்வாறு கூறிவிட்டு, அவன் வெட்ட வெளிப் பார்வையுடன் சிறிது நேரம் நின்றான்.



"என்னை என்ன செய்யணும்னு சொல்றீங்க?" என்றாள் சந்தியா.

"நத்திங்... உன்னோட அனுதாபத்தைப் பெற வேண்டி நான் பேசறதாகவும் நீ நெனைக்க வேணாம்... ஐ திங்க்..."

அவன் மேலே தொடராமல் நிறுத்தினான்.

"சொல்லுங்க..."

"எல்லாத்தையும் விட்டுட்டு, ஐ மீன், சிந்திக்கிறதையே விட்டுட்டு, ஒரு 'அனிமெல்லா' என்னை மாத்திக்க முடியுமான்னு பார்க்கப் போறேன். கோமளாவைக் கூட்டிண்டு வரலாம்னு பாக்கிறேன்..."

"வாட் டு யு திங்க ஆஃப் யுவர் செல்ஃப்?" என்று கோபத்துடன் கேட்டாள் சந்தியா. "உங்களுக்குத் தேவைப்படற போது, கோமளா உங்களுக்கு வேணுமா?"

"நான் கூப்பிட்டேன்னா அவ நிச்சயமா வருவா. 'ஷி வில் ஃபீல் ஹாப்பி...' உன்னுடைய 'ஸோ—கால்ட்' ப்ரொகிரஸிவ் வ்யூஸை'ப் பத்தியெல்லாம் அவளுக்கு ஒண்ணும் தெரியாது... அவளுக்குத் தெரியவும் வேணாம். வி வில் பி எ குட் மாட்ச். மேட் ஃபர் ஈச் அதர்... சந்தோஷமான மிருகங்கள்..." என்று கூறிக் கொண்டே அவன் உரக்கச் சிரித்தான்.

இவனுக்கு என்னாகி விட்டது? இவனுடைய அம்மாவின் சீற்றம் இவனை மிகவும் பாதித்திருக்கிறது... அல்லது... ஒருவேளை... தன்னைக் கூப்பிட்டு அவன் இப்படியெல்லாம் பேசுவானேன்? 'என்னுடைய வீழ்ச்சியைப் பார்' என்று பறைசாற்றிக் கொள்கின்றானா? 'என்னுடைய வீழ்ச்சிக்கு நீதான் காரணம்' என்று குற்றம்சாட்டுகின்றானா?

"நீங்கள் மிருகமாக உங்களை ஆக்கிக் கொள்வதைப் பற்றி யாரும் ஆட்சேபிக்கப் போவதில்லை. அது உங்கள் உரிமையாக இருக்கலாம். ஆனால் கோமளாவையும் இன்னொரு மிருகமாக நீங்கள் சித்திரிப்பதை அவள் விரும்பமாட்டாளென்று நினைக்கின்றேன்" — என்றாள் சந்தியா ஆங்கிலத்தில்.

"அவளை மிருகமாகக் கருதி என்னையும் மிருகமாக மாற்றிக் கொண்டால்தான் அவளுடன் நான் சேர்ந்து வாழ்வது சாத்தியம். துருவ்வைக் கொன்று விட வேண்டும்..

''அவசியமில்லை. கோமளா உங்களிடம் விவாகரத்து கோரப் போகிறாள்.''

''டிவோர்ஸ்?'' என்று கேட்டு விட்டுத் திடுக்கிட்டு நின்றான் துருவ்.

''ஆமாம், 'டிவோர்ஸ்'தான். இது அவளுக்கு என்னோட 'அட்வைஸ்'.. அவளாலே உங்களோட சந்தோஷமா இருக்க முடியாது.''

''ப்ளீஸ்... உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். 'டிவோர்ஸ்' வேணாம்... இது எனக்கு அவமானம். நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கலேன்னு உனக்குக் கோபம்.. அதுக்காக, என் வாழ்க்கையை 'மிஸரபில்'லா நீ ஆக்கப் பார்க்கறே...''

''டோன்ட் டாக் ரப்பிஷ்... அந்தப் பெண் அவளோட வீட்டுக்குப் போன போது வாயை மூடிண்டிருந்தீங்க... அவளை அவ இஷ்டப்படி இருக்கச் சொன்னீங்க... அவ எப்படி இருந்தாலும் அதைப் பத்தி உங்களுக்குக் கவலையில்லேன்னு நீங்க சொன்னப்புறம், அவ 'டிவோர்ஸ்' கேக்கறதிலே என்ன தப்பு?''

''அவ 'டிவோர்ஸ்' கேட்டா, அது என்னைப் பத்திய விமர்சனமா இருக்கும். ஐ டோன்ட் வான்ட் இட்...''

''அவ உங்களை விட்டுப் போய் அவ இஷ்டப்படி இருந்தால்...?''

''அப்பொ அது அவளைப் பத்திய விமர்சனம்...''

''அப்பொவும், நீங்கதான் அவளை அவ வீட்டுக்கு அனுப்பிச்சதா இருக்கணுமா?''

''இப்பொ எல்லாரும் அப்படித்தான் பேசிண்டிருக்காங்க, இல்லையா?''

''இல்லே...''

''இல்லையா?''

''இல்லே! உங்களுடன் இருக்கப் பிடிக்காமெ அவளாகவே போயிட்டான்னு தான் பேசிக்கிறாங்க... சடகோபன் நீங்க ஒரு பொண்ணுக்கு எல்லா விஷயத்திலும் கணவனா இருக்க முடியுமான்னு சந்தேகப் படறார். சந்தேகப்படறதோட மட்டுமல்லாமெ, எல்லார்கிட்டேயும் அப்படி சொல்லிண்டுமிருக்கார். ஐ ஆம் ஸாரி டு டெல் யு திஸ்.''

துருவ் அதிர்ந்து போய் நின்றான். அவன் ஒன்றும் பேசவில்லை.

**அ**வனை அப்பொழுது பார்க்கும் போது, சந்தியாவுக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. இதைச் சொல்ல வேண்டாமென்றுதான் அவள் நினைத்தாள். ஆனால் சொல்லும்படியாக அவன் செய்து விட்டான்.

அவன் தன்னறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டான்.

விணை நாதத்தை எதிர்பார்த்து, சந்தியா சிறிது நேரம் நின்றாள்.

விணை ஒலிக்கவில்லை.

சந்தியா கீழே இறங்கி வந்தாள்.

மஞ்சுளா, அவளுடைய வீட்டு அலுவலக அறையிலிருந்தது அவளுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

அவள் துருவ்வைச் சந்திக்க வந்த போது, அவள் ஆபீசுக்குச் சென்றிருப்பதாக உத்தம் சிங் சொன்னான்.

சந்தியாவைப் பார்த்ததும் மஞ்சுளா சொன்னாள்: ''நீ மேலே இருக்கேன்னு உத்தம் சிங் சொன்னான்..''

''நீங்க ஆபீசுக்குப் போயிருப்பதா உத்தம் சிங் சொன்னான். துருவ் என்னைப் பார்க்கணும்னார், வந்தேன்.''

என்ன விஷயமென்று மஞ்சுளா கேட்பாளென்று சந்தியா எதிர்பார்த்தாள். ஆனால் அவள் கேட்கவில்லை.

''நான் ஒரு பெரிய சிக்கல்லே மாட்டிண்டிருக்கேன்'' என்றாள் மஞ்சுளா சிறிது நேரம் கழித்து.

''சிக்கலா?''

''எஸ்...''

''என்ன சிக்கல்? துருவ்வைப் பத்தியா?

''துருவ்வா? லெட் ஹிம் கோ டு ஹெல். வியாபாரச் சிக்கல்.''

சந்தியா என்னவென்று கேட்கவில்லை. அவளுக்கு வியாபாரத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவளால் உதவி செய்யவும் இயலாது.

மஞ்சுளாவே சொல்ல ஆரம்பித்தாள். சன்னாவைப் பற்றி, அமைச்சரைப் பற்றி, பாதுகாப்புத் தளவாடங்கள் ஏஜென்ஸி பற்றி, அவளுடைய பினாமியாகிய ஹரி கிஷனைப் பற்றி, பத்மநாபனைப் பற்றி.

பாதுகாப்புத் தளவாடங்கள் ஏஜென்ஸி விவகாரம் சிக்கலை உண்டாக்கி விட்டது. அந்த மேற்கத்திய நாட்டின் போட்டிக் கம்பெனி, அந்த நாட்டு எதிர்க்கட்சிக்காரர்களைத் தூண்டி விட்டு விட்டது. வியாபார தர்மத்துக்கு முரணான காரியங்கள் நடக்கின்றன என்பது குற்றச்சாட்டு. சன்னாவும் அமைச்சரும் ஒதுங்கி விட்டார்கள்.

பத்மநாபன் கைது செய்யப்பட்டிருக்கிறார். அவரை விடுவித்தாக வேண்டும்.

அவளுடைய ஐரோப்பிய பிரதிநிதி நிக்கல்ஸன் முயல்கிறான். இந்தியத் தூதுவரகம் ஒத்துழைக்க மறுத்து விட்டது. இது மந்திரியின் கட்டளை. இந்தியத் தூதுவரகம் அக்கறை காட்டினால், மந்திரியை அடையாளம் காட்டி விடுமோ என்ற பயம் அவருக்கு.



''உனக்கு மூளை இருக்குதா... அந்தப் பொண்ணைத்தான் கட்டிக்குவேங்கிறியே... அதுக்கு 20 வயசுதான் ஆவுது... உனக்கு 36. பொண்ணுக்கு 26 வயசாவது இருக்கணும்.

''சரி, இன்னும் 6 வருஷம் காத்துகிட்டிருக்கேம்ப்பா!''

மஞ்சுளா, துருவ்வோடு அன்று காலை ஏன் கோபமாகப் பேசினாள் என்று சந்தியாவுக்குப் புரிந்தது.

ஒரே பிள்ளை, அவனால் அவளுக்கு எந்தவிதமான பிரயோசனமுமில்லை.

ஆனால் இந்தச் சிக்கல், மஞ்சுளா அவளாகவே தன்னைச் சுற்றிப் பின்னிக் கொண்ட வலை.

பார்க்கப் போனால் எல்லாருமே தங்களைச் சுற்றி ஏதாவதொரு வலையைப் பின்னிக் கொள்ளுகிறார்கள். வலைக்கு மேல் வலை. இதுதான் வாழ்க்கை நியதி.

துருவ் அவ்வாறு பின்னிக் கொள்ள விரும்பவில்லை. சமூகத்தினின்றும் ஒதுங்கி நின்று, கடமையின் அடிமையாக இல்லாமல், தன் சுதந்திரத்தின் எல்லை என்னவென்று தேடி அலைகிறான்.

ஆனால் அவனால் சந்தோஷமாக இருக்க முடிகின்றதா?

அப்பொழுது டெலிஃபோன் ஒலித்தது.

மஞ்சுளா ஃபோனை எடுத்தாள். மஞ்சுளாவின் முகம் மலர்ந்தது.

''குட்... வாருங்கள், பேசலாம்,'' என்று கூறி விட்டு ஃபோனைக் கீழே வைத்தாள்.

''பத்மநாபனை விட்டுட்டாங்க... ஆனா...'' அவள் சிறிது நேரம் சிந்தனை விலாழ்ந்தாள். பிறகு அவளாகவே சொன்னாள்: ''இந்தச் செலவுலேர்ந்து மீள ரெண்டு வருஷமாவது ஆகும்.''

''ஆன்ட்டி, நான் உங்களை ஒண்ணு கேக்கலாமா?''

''என்ன?''

''வியாபாரத்தை யார் கையிலாவது ஒப்படைச்சுட்டு, நீங்க ஓய்வெடுத்துக் கொள்ள முடியாது?''

''முடியாது.''

''ஏன்?''

''எனக்கு இதைத் தவிர வேறொண்ணும் தெரியாது. வாழ்க்கைக்கு அர்த்தமில்லாமெ போயிடும்.''

''ஆனா... இந்த டென்ஷன்... கவலை...''

''எல்லாமே என் 'ஸிஸ்டம்' வேலை செய்யத் தேவையாயிருக்குன்னு நினைக்கிறேன். பட் டு ஐ ஹாவ் எ...?'' என்று மேலே ஒன்றும் சொல்லாமல் நிறுத்தினாள் மஞ்சுளா.

''சொல்லுங்க ஏன் நிறுத்திட்டேள்?''

''ஹோம்?''

''எல்லாருக்குமே இந்தப் பிரச்னை தான்...'' என்றாள் சந்தியா.

''சரி... உன் பிரச்னை என்ன ஆச்சு...?''

''எந்தப் பிரச்னை?''

''மிஸ்டர் சாவ்லா...?''

சந்தியா நடந்ததைச் சொன்னாள்.

''ரியலி? லுக் அட் தட் ஃபெல்லோ... அறுபது வயசுக்கு மேலாறது. ஒரு பெண் தனியா இருந்தா விளையாடப் பாக்கறான். அவனை நான் பார்த்தப்போ, எனக்கு அவன் ரொம்ப 'டீஸன்டா' இருந்த மாதிரி



''இன்னிக்கு சைக்கிள்ல லைட் இல்லாம வர்ற ஒருத்தரைப் பிடிச்சு வாங்கு வாங்குன்னு வாங்கிட்டேன் சார்!''

''வாங்கியதில் பாதியை எடுய்யா!''

— ஞா. ஞானமுத்து

தான் பட்டது. 'ஸாஃப்ட் ஸ்போக்கன்' பட்...'' என்று கூறி விட்டு மஞ்சுளா தோள்களைக் குலுக்கினாள்.

அப்பொழுது மாடியிலிருந்து வீணை நாதம் ஒலிக்கத் தொடங்கியது.

மஞ்சுளா கேட்டாள்: ''துருவ் எதுக்காக உன்னைப் பாக்கணும்னான்?''

''தெரியலே... பாக்கணும்னார் வந்தேன். வந்தவுடனே ஒரு பெரிய 'ஆர்குயுமென்ட்'. துருவ் 'ஈஸ் நாட் டிஃபரன்ட்'. பெண்களைப் பத்தி அவர் அபிப்பிராயம் எல்லா ஆம்பிளைக்கும் இருக்கிற மாதிரிதான் இருக்கு...''

''வாட் டு யு மீன்? உன்கிட்டே 'மிஸ் பிகேவ்' பண்ணானா?''

''நோ... நோ...'' என்று தலையை ஆட்டிக் கொண்டே, அவள் நடந்ததைக் கூறினாள்.

மஞ்சுளா சிறிது நேரம் பேசாமலிருந்தாள். பிறகு சொன்னாள். ''அவன் கோமளாவிடம் எப்படி வேணுமானாலும் இருந்துட்டுப் போறான். அவ அவனோட ஆம்படையா, உனக்கென்ன?''

''நீங்க இப்பொ அம்மாவா மாறிட்டேள். நீங்களும் ஒரு பெண்ணுங்கிற நினைவு இருந்தாத்தான் இன்னொரு பெண்ணோட உணர்ச்சிகளை மதிக்கத் தெரிஞ்சுருக்கும்.''

''ஐ ஆம் ஸாரி... துருவ்வை நீ மத்த ஆம்பிளைகள் மாதிரி எடை போட்டுப் பேசக் கூடாது. என்ன செய்யறோம்னு அவனுக்கே தெரியலே. நான் காலம்பற ஒரேயடியா அவன்கிட்டே கத்தினேன். ஆனா, அப்புறம் ஏன் கத்தினோம்னு ஒரே வருத்தமா இருந்தது... அவன் 'ஜீனியஸ்' சந்தேகமேயில்லே. 'கீர்வாணி'... என்னமா வாசிக்கிறான் பாரு.''

''பட்... இன்னொரு 'ஸைட்' வளரவேயில்லே. ஹி ஈஸ் ஸ்டில் எ சைல்ட்.''

''இதுதான் என் 'ட்ராஜெடி'...'' என்றாள் மஞ்சுளா பெருமூச்செறிந்தவாறு.

''அவரோட 'ட்ராஜெடி'ன்னு சொல்லுங்க'' என்றாள் சந்தியா. (தொடரும்)




# சுவரைக் காப்பாற்றிக் கொள்வது எப்படி...?

எந்த அரசியல் கட்சிக்காரனாவது இதுவரை தான் கிறுக்கின நம் வீட்டுச் சுவருக்கு மறுபடி வெள்ளை அடித்துக் கொடுத்திருக்கிறானா? (அப்படியாரேனும் இருந்தால் கின்னஸ்காரனுக்குத் தெரியாதிருக்குமா?)

ஜெயித்த கட்சிக்காரனிடம் நாம் 'வெள்ளை அடித்துக் கொடுடா' என்று கேட்க முடியாது. வெற்றி மதர்ப்பில் — திமிர் என்றும் சொல்லலாம் — இருப்பான். தோற்ற கட்சிக்காரனோ சோகத்தில் இருப்பான். 'கண்ணீர் விட்டு நான் கழுவவோ?' என்று பாடினாலும் பாடுவான்.

ஆக, யார் தோற்றாலும் ஜெயித்தாலும் அசிங்கமாக இருக்கப் போவது நம்ம வீட்டுச் சுவர்தான்.

சில காலனி வீடுகளின் சுவர்களில் இரண்டு மாமாங்கத்துக்கு முன் நடந்த தேர்தல் விளம்பரம் கூட அஜந்தா ஓவியம் போல் அழியாமல் இருப்பதை இப்போதும் காணலாம்!

இதில் என்ன அக்கிரமம் என்றால், சுவர் நம்முடையதாய் இருக்க, அதை யார் கொலை'செய்வது என்று கட்சிக்காரர்கள் சுவாரசியமாகப் போட்டி, போட்டுக் கொண்டு, நம் வீட்டுச் சுவரை, நம் உத்தரவோ அனுமதியோ இல்லாமல், தங்களுக்குத்தான் இந்த இடம் சொந்தம் என்று ரிசர்வ் செய்து விட்டுப் போவது தான்! கரிக்கோட்டில் பார்டர் கட்டி 'இது பூரா எங்கள் கட்சிக்கு. வேறு யாரும் எழுதக் கூடாது' என்று எழுதி வைப்பார்கள்.

இரண்டாயிரம் ரூபாய் செலவு பண்ணி சுவருக்குச் சுண்ணாம்படித்த நாம், கொட்டாப்புளி மாதிரி இருந்தாலும், நம் கண்ணெதிரேயே நம் சுவரில் தேர்தல் வாக்கியங்களை எழுதுவது — தமிழ் சினிமாவில் குகையில் கதாநாயகனை இரும்புச் சங்கிலியால் பிணைத்து விட்டு, அவன் காதலியின் கன்னத்தில் அவன் கண்ணெதிரேயே முத்தம் கொடுப்பானே, வில்லன் — அந்த

ஷிவ்ராம்

அநாகரிகத்தையே நினைவூட்டுகிறது!

அதை நாம் ஆட்சேபித்தால் தொண்டர்கள் சோடா புட்டியால் நம் வீட்டு ஜன்னலை உடைப்பார்கள். கண்ட குப்பை நரகல் எல்லாம் பொட்டலமாக வந்து நம் வீட்டில் விழும்!

**ஏ**து எப்படி ஆனாலும் இந்தத் தடவை அரசியல் கட்சிக்காரர்களுக்கு எங்கள் சுவர்களைப் பலி கொடுப்பதில்லை என்று எங்கள் தெருவாசிகளில் துணிச்சலுள்ள சிலர் (நான் உட்பட) தீர்மானித்தோம். அதற்காக ஒரு கூட்டம் போட்ட போது பல யோசனைகள் கூறப்பட்டன. அவற்றில் சில:

## 1. திருத்தல் முறை

எழுத வருகிற கட்சிக்காரர்கள் பிரஷ், பெயிண்ட் வைத்திருப்பது போல வீட்டுக்காரரும் ரகசியமாக வைத்திருக்க வேண்டும். கட்சிக்காரர்கள், 'உங்கள் ஓட்டு எங்களுக்கே!' என்று எழுதி விட்டுப் போனால் நாம் 'ஓட்டு' என்பதை 'வேட்டு' என்று திருத்தி விட வேண்டும்.

'தாய்க்குலமே, எங்களை மறந்திடாதீர்' என்று வாசகம் இருந்தால் நாம் 'தா'வை 'நா' செய்து விட வேண்டும்.

## 2. படம் மாற்றிக் குழப்பும் முறை

'உடன் பிறப்பே! உதய சூரியனை ஆதரிக்க ஓடி வா' என்பது போன்ற வாக்கியத்தை எழுதி, கலைஞர் கருணாநிதியின் படத்தை எழுதியிருப்பார்கள். வாக்கியம் அப்படியே இருக்கும். ஆனால் கலைஞருக்குப் பதிலாக ஜெயலலிதா படத்தை அங்கு கலைஞர் படத்துக்கு மேல் ஒட்டி விட வேண்டும்! இதே போல் அ. இ. மு. க. விளம்பரங்களில் செல்வியின் படத்துக்குப் பதில் கலைஞரின் படத்தை ஒட்டி விட்டால், ''தி. மு. க. வை நம்பாதீர்கள்'' என்று கலைஞரே சொல்லுவது போல அமைந்து விடும்!

## 3. வள்ளல் வாக்குறுதி முறை

கட்சிக்காரர்கள் எழுதி விட்டுப் போனதும் அந்த அறிவிப்பின் கீழ் இப்படி எழுதி விட வேண்டும். ''அன்புப் பெருமக்களே, வட்டார வாசிகளே, இன்று மதியம் பன்னிரண்டு மணிக்கு மேல் கட்சியின் வட்டார அலுவலகத்துக்கு வந்து ஆளுக்கு இருபது கிலோ இலவச அரிசி பெற்றுச் செல்வீர்'' என்றோ, ''ஆளுக்குக் கால் பவுன் மோதிரம் வாங்கிச் செல்வீர்'' என்றோ எழுதி வைத்து விட வேண்டும். அப்புறம் வட்டார அலுவலகம் படாதபாடு படும்! நாம் ரகசியமாகச் சிரித்துக் கொண்டிருக்கலாம்!

## 4. லாரி மறியல் முறை

ஒரு பெரிய சரக்கு லாரியைக் கொண்டு வந்து சுவர் ஓரமாக, சுவரையொட்டி நிறுத்தி விட்டுச் சக்கரங்களைக் கழற்றி விட வேண்டும். தேர்தல் பிரசாரம் எழுத வருகிற ஓவியர்கள் லாரியின் இடுக்கில் புகுந்து எழுத முடியாது. அப்படியே எழுதினாலும் லாரி மறைத்துக் கொண்டிருப்பதால் படிக்க முடியாது என்பதால் நம் சுவர்ப் பக்கம் வர மாட்டார்கள்.

## 5. பானை வியாபாரம்

யாராவது ஒரு பானை வியாபாரியைப் பிடித்து, காம்பவுண்டு சுவர், அதையொட்டிய பிளாட்பாரம் பூராவும் பானைகளாக அடுக்கி விட வேண்டும்.

தேர்தல் சமயத்தில் கட்சிக்காரர்கள் ஒரு வியாபாரியைப் பகைத்துக் கொள்ள விரும்ப மாட்டார்கள். பானைகள் தொட்டால் உருண்டு உடைந்து விடக்கூடியவை. ஆகவே சுவரை அணுகி எழுத மாட்டார்கள்.

**யோ**சித்தால் உங்களுக்கே மேலும் பல யோசனைகள் தோன்றக்கூடும். எல்லாவற்றையும் விட என் மனைவி சொன்ன ஒரு யோசனைதான் எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது. ஒரே கல்லில் இரண்டு மாங்காய் அடிக்கிற யோசனை அது! அது என்னவென்றால், வேறு யாரும் நம் வீட்டுக் காம்பவுண்டு சுவரில் எழுதுவதற்கு முன், நாமே நமக்குப் பிடித்த கட்சிக்கு வோட்டுப் போடுமாறு நமது சுவரில் எழுதி வைத்து விடுவது! இதன் மூலம், நம் சுவரை இன்னொருவர் பாழ்படுத்தவில்லை; நாமே தான் பாழ்படுத்தினோம் என்று ஒரு திருப்தி! அதே சமயம், நமக்குப் பிடித்த ஒரு தலைவருக்கும் அவரது கட்சிக்கும் தொண்டாற்றிய பெருமை! இரட்டிப்பு லாபம்தானே!

அடுத்த இதழில்...

**நாகேஸ்வரராவ்:**

**பாட்டாளிக் குடும்பத்திலிருந்து பால்கே விருது வரை...**

— ஓர் அலசல்










# துக்கம்

கிருஷ்ணா

அந்த செய்தி எனக்கு அதிர்ச்சியாய் இருந்தது.

''எப்ப ஆச்சு?'' என்றேன் பரபரப்பாய்.

''நேத்து ராத்திரி பத்து மணிக்கு இருக்கும். ட. வி.யில் 'வோர்ல்டு திஸ் வீக்' பார்த்துக்கிட்டு இருந்தாராம். திடீர்னு நெஞ்சு வலி. அந்த ராத்திரி நேரத்துல ஆட்டோவைப் பிடிச்சு, டாக்டரிடம் போறதுக்குள்ளே டூ லேட். பாவம்'' என்று பாலு சொல்லிக் கொண்டிருந்தான் விளக்கமாய்.

பாலுவின் பக்கத்து வீட்டுக்காரன் சசிதரனின் சாவைப் பற்றித்தான் பேச்சு.

அலுவலகமே ஸ்தம்பித்தது. சசிதரன் எனது நெருங்கிய நண்பன். பிரம்மசாரியாய் இருவரும் இந்த அலுவலகத்தில் நுழைந்ததிலிருந்து இந்த ஐம்பது வயது வரை இழையோடும் நட்பு.

''என்ன சார், உங்க நண்பருக்கு இப்படி ஆயிடுச்சே'' என்று சிலர் எங்கள் நெருக்கத்தை வைத்து என்னிடம் அனுதாபம் தெரிவித்தனர்.

''சார் முகம் எப்படி இருண்டு போச்சு பாரு செய்தி கேள்விப்பட்டதும். எத்தனை வருஷ நட்பு?'' என்று சிலர் என் காது படவே பேசிக் கொண்டனர்.

உண்மைதான்! செய்தி அறிந்து நான் அரண்டுதான் போய் விட்டேன்.

போன வாரம் ஒரு பத்தாயிரம் ரூபா

யைச் சசிதரனுக்குக் கடனாய்க் கொடுத்திருந்தேன். பிராவிடண்ட் பண்ட் கடன் போட்டிருக்கிறான். இன்று அல்லது நாளை வந்து விடும். வந்தவுடன் தந்து விடுவதாக நேற்று கூட என்னிடம் சொன்னான். வீடு கட்டும் அவன் தங்கை வீட்டுக்காரரின் அவசரத்துக்குக் கொடுத்த பணம் அது. அவன் மனைவிக்கும், தங்கைக்கும் ஆகாது.




அதனால், இதைப் பற்றி வீட்டில் சொல்லியிருப்பானா?

மனம் பகீரென்றது.

ஒருவேளை அவன் இதைப் பற்றிச் சொல்லவில்லை என்றால்...?

அடுத்த மாதம் நடக்க இருக்கும் என் பெண்ணின் திருமணத்திற்காக வைத்திருந்த பணம் அது.

பத்தாயிரம் என்றால் என்னைப் போன்ற நடுத்தரக் குடும்பத் தலைவனுக்கு எவ்வளவு பெரிய தொகை.

மனசு துடித்துப் போயிற்று.

லீவு எழுதிக் கொடுத்து விட்டுச் சசியின் வீடு நோக்கிப் பறந்தேன்.

**"மா**மா" என்று என்னைப் பார்த்ததும் ஓடி வந்து கட்டிக் கொண்டு அழுதான் சசியின் பையன் ஹரிஹரன். டிகிரி முடித்து விட்டு வேலை தேடிக் கொண்டிருக்கிறான்.

'சசி இறந்து போனதால் இவனுக்கு எங்கள் ஆபிசிலேயே வேலை கிடைத்து விடுமே' என்று நினைத்தது மனம்.

'கண்டதை நினைக்காமல் பத்தாயிரம் ரூபாயை நினைத்துப் பார்' என்று மனத்தில் இன்னொரு குரல் இடித்தது.

சசியின் மனைவி மூலையில், அழுது அழுது வீங்கிய முகத்துடன் அமர்ந்திருந்தாள்.

என்னிடம் வாங்கிய கடனைப் பற்றி இவளிடம் சொல்லியிருப்பானா சசி? தெரியவில்லை.

தாழ்ந்த குரலில் அங்கங்கு நின்று கூட்டங் கூட்டமாய்ப் பேசிக் கொண்டிருந்தனர்.

சசியின் உடல் நடுக்கூடத்தில் கிடத்தப் பட்டிருந்தது. தலைமாட்டில் விளக்கு ஏற்றி வைத்திருந்தனர். கூடவே ஊதுபத்தி. அதன் மணம் சசியின் உடலுக்குப் போட்டிருந்த பூமாலையின் மணத்துடன் சேர்ந்து நாசியை வருத்தியது.

"டேய், ஒரு நிமிஷம். எழுந்திருந்து என் பணத்தைப் பற்றிச் சொல்லிட்டுடா" என்று மனசுக்குள் அவனைப் பார்த்து அரற்றினேன்.

அவன் தங்கை வீட்டுக்காரர் பக்கத்து அறையிலிருந்து வெளிவருவது தெரிந்தது.

'அவரிடம் என் பணத்தைப் பற்றிச் சசி சொல்லியிருக்கலாமே' என்ற எண்ணம் தந்த வேகத்துடன் அவரை நெருங்கினேன்.

என்னை முன்பே பல தடவை பார்த்திருந்ததால் அவர் தயங்கி நின்றார்.

"இப்படி ஆயிடுச்சே சார்!" என்றேன் துவக்க உரையாய்.

"ப்ச! பாவம் சார். ரொம்ப உதவி செய்யற மனப்பான்மை உள்ளவர். என் மனைவி மேலே அவ்வளவு பாசம் அவருக்கு. போன வாரம் கூட ஒரு பத்தாயிரம் ரூபாய் அவசரமாய் வேண்டியிருந்தது. கேட்ட அடுத்த நாளே கொடுத்துட்டார்னா பார்த்துக்குங்களேன்" என்று அவர் சொன்னதும் என் நரம்பு மண்டலத்தினுள் ஒரு சிலிர்ப்பு ஓடியது.

"ஆமாம் சார். சசிக்கு ரொம்ப நல்ல மனசு. யார் கஷ்டப்பட்டாலும் பிடிக்காது. அது சரி அவ்வளவு பணத்தை யாரிடமிருந்து வாங்கினான்னு தெரியுமா?" என்றேன் படபடப்பாய்.

"நானும் கேட்கலே. அவரும் சொல்லலே சார். வீட்டுல வந்து பணம் கொடுத்ததும் உடனே புறப்பட்டுட்டார் அன்னிக்கு. நல்ல மனுஷன் சார்" என்று உருகியவரை செய்வதறியாது போலப் பார்த்தேன்.

'பாவி! கேட்டிருக்கக் கூடாதா சசியிடம்? இப்படி என்னைத் திண்டாட விடுகிறாயே!' என்று மனசுக்குள் திட்டினேன்.

**"மா**மா, எனக்குக் கையும் ஓடலே, காலும் ஓடலே. கொஞ்சம் அம்மாவைச் சமாதானப்படுத்துங்க. ரொம்ப அழறாங்க" என்றான் ஹரி அருகில் வந்து.

பாவம், இந்த இளம் வயதில் அப்பாவை இழந்தது நிச்சயம் அதிர்ச்சியாய்த்தானிருக்கும் ஹரிக்கு.

— நினைத்தபடி சசியின் மனைவியிருக்கும் மூலையை நோக்கி நகர்ந்தேன்.

என்னைப் பார்த்ததும் 'குபுக்'கென்று அழுகை பொங்கியது அவளுக்கு.

"இப்படி விட்டுட்டுப் போயிட்டாரே" என்று குரல் எடுத்து அழுதாள்.

கொஞ்சம் ஆறுதல் படுத்தும் விதமாய்ப் பேசினேன்.

நடுநடுவில் பத்தாயிரம் ரூபாய் எண்ணம் எட்டிப் பார்த்தது.

"எவ்வளவு யோக்கியனா வாழ்ந்தான் சசி. ஒருத்தரிடம் ஒரு பைசா கடன் வைச்சுக்க மாட்டான். அப்படியே அபூர்வமாய் வாங்கினாலும் சொன்ன நேரத்துல திரும்பிக் கொடுத்துடுவான். அவ்வளவு வாக்கு சுத்தம்" என்றேன் அவனைப் புகழும் விதமாய்.

அழுகையை நிறுத்தி ஒரு நிமிடம்

என்னைப் பார்த்தாள்.

''யார் யாருக்கு அவர் கடன் கொடுத்திருக்கிறார்ங்கறதையும், யார், யாருக்குக் கடனைத் திருப்பித் தரணும்னும் டைரியிலே எழுதி வைச்சிருக்காரு. நேற்று சாயந்திரம் என்னைக் கூப்பிட்டு அதைக் காட்டினாரு. உங்களிடம் கூட போன வாரம் கடன் வாங்கியிருக்கிறதா எழுதியிருக்கார்'' என்று பல்லால் உதட்டைக் கடித்தபடி அழுகை அடங்கிய மெல்லிய குரலில் அவள் சொன்னதும் அடிபட்டுப் போன மனத்துடன் தலைகுனிந்தேன்.

ப்ச! என்ன நண்பன் நான். என் மனத்திலுள்ளதைப் படித்து 'டக்'கென்று விண்டு வைத்து விட்டானே! — அவமானமாய் இருந்தது எனக்கு.

திரும்பிச் சசியின் உடலைப் பார்த்தேன். முகம் லேசாக வீங்கியிருந்தது. இருந்தாலும் சிரித்த முகமாய் இருந்தது.

அவனைப் பார்க்கப் பார்க்க மனத்தில் ஏதோ ஒரு பந்து வந்து அடைத்துக் கொண்டாற் போல் துக்கம் பொங்கியது.

இனி அவனை, அவன் அட்டகாசச் சிரிப்பை, கலகலப்பான பேச்சை, இடது கையால் எழுதும் குண்டு, குண்டு கையெழுத்தைப் பார்க்க முடியாது என்ற எண்ணம் தோன்ற மனம் வலித்தது.

இத்தனை நேரம் பணக் கவலையினால் மறைந்திருந்த எங்கள் நட்பும், நெருக்க உணர்வும் இதயத்தில் தலைதூக்க, குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தேன்.

# சொன்னது சொன்னபடி...

o இ. காங்கிரஸ் ஆட்சியின் போது பாரிஸில் நடந்த இந்தியா ஃபெஸ்டிவலுக்கு 67 லட்ச ரூபாய் செலவழித்து ஜோத்பூர் ஷாமியானா (பந்தல்) அனுப்பி வைத்தார்கள். கடைசியில் அங்கே இடம் போதாமல், அதை உபயோகிக்கவே இல்லை! இப்படிப் பணத்தை விரயடித்தால், ஏன் அந்நியக் கடன்கள் வாங்க மாட்டோம்?

— துணை நிதி அமைச்சர் திக் விஜய்சிங்

o தி. மு. க. ஆட்சி கவிழ்க்கப்பட்டதால், அ. இ. அ. தி. மு. க. வும், இ. காங்கிரசும் பயன் அடைந்ததே தவிர, எங்களுக்கு என்ன லாபம்? இதிலிருந்தே அவர்கள் சொன்னதால் நாங்கள் ஆட்சியைக் கலைக்கவில்லை என்று தெரியவில்லையா?

— சுப்பிரமணியம் சுவாமி.

o எனக்குப் பணம் பண்ணுவதில் ஆசை இல்லை. செல்வமும் சொத்துக்களும் சேர்த்து வைக்க வேண்டும் என்பதே குறியாக நான் இதுவரை செயல்படவும் இல்லை.

— ஜே. ஆர். டி. டாட்டா.

o இந்தத் தேர்தலில் உண்மையான பலப் பரீட்சை பாட்டாளி மக்கள் கட்சிக்கும் அ. இ. அ. தி. மு. க. வுக்கும்தான். தி.மு.க. வுக்கு மூன்றாம் இடம்தான் கிடைக்கப் போகிறது.

— டாக்டர். ராமதாஸ்.

# நடந்தது நடந்தபடி...

o சுப்பிரமணியம் சுவாமியின் பத்திரிகையாளர் கூட்டத்துக்குப் பெரும்பாலும், தவறாமல் ஆஜராகி விடுகிறார் ஒரு பெண்மணி. அவர் சுப்ரீம் கோர்ட் வழக்கறிஞர். சுவாமியின் கூட்டங்களில் ஒரு ஓரத்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, அவர் வாயிலிருந்து உதிரும் 'முத்துக்கள்' ஒன்றையும் விடாமல் குறித்துக் கொண்டு விடுகிறார். வேறு யாருமில்லை. அவர்தான் சுவாமியின் மனைவி!

o டீ. வி. விளம்பரப் புகழ் டாக்டர் மாயா அலக், பாரதிய ஜனதாவில் சேர்வதற்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள் போலிருக்கிறது. பி. ஜே. பி. யின் பிரசார வீடியோ படத்தில், கையில் கட்சியின் சின்னமான தாமரையை ஏந்திக் கொண்டிருக்கிற மாதிரி நிறையக் காட்சிகள் எடுத்திருக்கிறார்கள். மாயாவின் டூத் பேஸ்ட் புன்னகையுடன் இனி 'தாமரை'யும் சேர்ந்து விடும்!

o ஆந்திரப் பிரதேசம் மகபூப் நகரில் உள்ளது பருக் நகர். இங்கே உள்ள வெங்கடாசலபதி கோயில் சுவரில் மட்டும் எந்தக் கட்சியும் வோட்டுப் போடச் சொல்லி வேட்பாளரின் பெயரை எழுதுவதில்லை. காரணம், அந்த வேட்பாளர் தோற்று விடுகிறாராம்! கம்யூனிஸ்ட் வேட்பாளர் கூட இந்தக் கோயில் சுவரை நெருங்கத் தயங்குகிறார்!

தொகுப்பு: எஸ். வி. என்.

# தொகுதி உடன்பாட்டில் ஒரு மோசடி!



என் நண்பர் தமது வீட்டுச் சுவரில் கட்சிகள் தேர்தல் விளம்பரம் பதிக்காமல் இருக்கத் தந்திரமாகப் பின்வருமாறு விளம்பரம் செய்தார்: "இந்தச் சுவர் ராசி இல்லாதது. கடந்த தேர்தல்களில் இங்கு விளம்பரம் எழுதியவர்கள் எல்லோரும் டெபாஸிட் இழந்திருக்கிறார்கள்!"

விளைவு?

அந்தச் சுவரில் மாற்றுக் கட்சியினரின் பெயரையும், சின்னத்தையும் வரைந்து அவர்களை டெபாஸிட் இழக்கச் செய்வதில் தொண்டர்களிடையே கடும் போட்டி! மொத்தத்தில் எல்லா வேட்பாளர்களின் விளம்பரமும் அந்தச் சுவரில் இடம்பெற்று விட்டது.

— க. நாகராஜன், பரமக்குடி.

o o o

"தொகுதி உடன்பாட்டுலே நம்ம கட்சித் தலைவரைக் கூட்டணி ஆளுங்க அநியாயமா ஏமாத்திட்டாங்க...

"எப்படி?"

"அவங்க ஒதுக்கியிருந்த தொகுதியிலே வேட்பு மனுதாக்கல் செய்யப் போனப்ப, அப்படி ஒரு தொகுதி தமிழ் நாட்டிலேயே இல்லையாம்...!"

— 'யானை' போடிநாயக்கனூர்.

o o o



தமிழாசிரியர் வகுப்பில் பாடம் நடத்திக் கொண்டிருந்த போது இருத்தலங்களைப் பற்றிப் பேச்சு வந்தது. "மதுரையில் மீனாட்சி இருக்கிறாள்; பழனியில் முருகன் இருக்கிறான்" என்று கூறிக் கொண்டே வந்தவர் எங்களிடம், "யார் சிதம்பரம் சென்றிருக்கிறீர்கள்?" என்றார். உடனே என் நண்பன், "நான் சென்றுள்ளேன்" என்றான்.




ஆசிரியர், "அங்கு யார் உள்ளார்?" என்றார்.

என் நண்பன் பட்டென்று "என் மாமா இருக்கிறார்!" என்றானே, பார்க்கலாம்!

— க. கார்த்திக், அருப்புக்கோட்டை.

o o o



காதலன்: "கட்டி இருக்கிற புடைவையோட





வந்துடு. இப்பவே நாம் ஓடிப் போயிட லாம்னு சொல்றேன். ஏன் தயங்கிட்டு நிக்கறே?''

காதலி: ''இந்தப் புடைவை தவணை முறை யில எடுத்ததுக்கு இன்னும் பணமே கட்டலை. கடைக்காரர் திட்டுவாரேன்னு யோசிக்கிறேன்!''

— என். உஷா தேவி, மதுரை.

o o o




சமீபத்தில் எங்க ஊர் டூரிங் தியேட்டரில் படத்துக் குப் போயிருந்தேன். திடீர் என்று கரண்ட் கட். பக்கத்தில் உள்ளவரிடம் ''இந்தத் தியேட்டரில் ஜெனரேட்டர் இருக்கா? '' என்று கேட்டேன். ''இருக்கு. டீசல்தான் இல்லை. நான்தான் போய் வாங்கி வர வேண்டும்'' என்றார். ''அப்புறம் ஏய்யா இங்கே உட்கார்ந்து இருக்கே? '' என்றேன்.

''படத்தில் முக்கியமான சீன் இனிமேல்தான் வரும். நான் டீசல் வாங்கப் போயிட்டா, கரண்ட் வந்து விட்டால் முக்கியமான சீன் பார்க்க முடியாதே? '' என்று ஒரு போடு போட்டார் அவர்!

— எஸ். பாண்டியராஜ், காரைக்குடி.

o o o



பையன்: அப்பா உங்க பெயர் இன்னஸ்ல வர்றதுக்கு எங்க வாத்தியார் ரெகமண்ட் பண்ணியிருக்கார்!.

அப்பா: எதுக்குடா?

பையன்: ஏழு வருஷமா நீங்க சொல்லிக் கொடுத்து நான் போட்ட கணக்கு ஒண்ணு கூட ரைட் இல்லையே. அதுக் குத்தான்!''

— எல். நடராசன், கடலூர்.

o o o




கடைசிப் பெஞ்சில் ஒரு மாணவன் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தான். பக்கத்தில் இருந்தவனைக் கூப்பிட்டு எழுப்பி விடச் சொன்னார் ஆசிரியர்.

அந்த மாணவன், அமைதியாக, ''சார்! நீங்க நடத்துன பாடத்தினாலதான் சார் அவன் இப்படித் தூங்கறான்! நீங்களே வந்து எழுப்பி விடுங்க!'' என்று சொன்னது மட்டுமல்லாமல்,

''அவனைத் தூக்கத்துல எழுப்பி விட்டா அடிச்சிடுவான் சார்!'' என்றும் முத்தாய்ப்பு வைக்க வகுப்பே அதிர்ந்தது!

ஆசிரியர் சமாளித்துக் கொண்டு,

''ஆமாமாம்! 'தூக்கத்துல எழுப்புனா பாவம்'னு சொல்வாங்க! அதோட எனக்கு அடி வாங்கவும் தெம்பில்லை!'' என்றதும் வகுப்பு மீண்டும் அதிர்ந் தது!

— மகேஸ், காரைக்குடி.

o o o




''உங்க கட்சியிலே போட்டியிட்ட ஐம்பத்திரண்டு பேரும்தான் தோத்துப் போயிட்டாங்களே? அப்புறம் என்ன பாராட்டு விழா?''

''இரண்டு பேருக்கு டெபாசிட் கிடைச் சிருக்கே!''

— எஸ். சுந்தரராஜ், பாளையங்கோட்டை.

# நேற்று வரை நந்தவனம்

அனுராதா ரமணன்

"இந்த பஸ் வேண்டாம் ரவி..."

டாக்டர் தெய்வநாயகி, பஸ்ஸின் ஜன்னலருகில் நின்ற தனது சகோதரனிடம் குமுறும் குரலில் சொல்கிறாள்.

"உஷ்... சப்தமாப் பேசாதே. அந்த ஆள் காதுல விழுந்து தொலைக்கப் போகுது... இதைப் பாருக்கா, நீ இப்ப வண்டியை விட்டு இறங்கினா, அவருக்கு இன்னும் மண்டை கனம் ஏறிக்கும். நீ லட்சியமே செய்யாதே.."

தெய்வநாயகியின் தம்பி, தன் தமக்கையைப் பிடித்து உட்கார்த்தி வைக்கிறான்.

"பேசாம, நீயும் வந்திடறியா?"

"நானா... என்னக்கா இப்படிப் பயந்து சாகறே. குழந்தை இளவரசுவை அம்மா ஒருத்தியாலே கவனிக்க முடியுமா? ஆச்சு... பஸ் கிளம்பப் போகுது. இத்தனை பேரு இருக்கிறச்சே. அந்த மனுஷன் உன்னை என்ன செஞ்சிட முடியும்? மெட்ராஸ் போனவுடனே மாம்பலத்துல நம்ம வண்டி நிற்கும். ஏறிட்டு வீட்டைப் பார்க்கப் போவியா? இந்த மெடிகல் கான்ஃபரன்ஸ் உனக்கு எப்பேர்ப்பட்ட பேரை வாங்கிக் கொடுக்கப் போவுது பாரு... அப்ப, நான் வரட்டுமா?"

தெய்வநாயகி — முன் வரிசையைப் பார்க்கிறாள். மீசையை ஒரு கையால் நீவியபடியே தர்மராஜனும் ஓரப் பார்வையால் மருமகளை அளக்கிறார்.

"ஏண்டா கருப்பையா.. குமரனை எங்கேடா காணும்?"

"வந்திருவாருங்க... உங்களை வழி அனுப்ப என்னிக்கு அவரு வரத் தவறியிருக்காரு?"

அவன் வந்தா, டாக்டரம்மா தலை — அவுங்க கழுத்துல இருக்குமாடா.. ஏற்கெனவே சீவிப்பிடறதா சபதம் போட்டிருக்கான்!"

— தருமராஜன் சிரிக்கும் போது இருட்டுக் குகை போல் காவிப் பழுப்பேறிய வாயில் ஓரிரண்டு தங்கப் பற்கள் பளீரிடுகின்றன..

என்னதான் பட்டை பெல்ட்டைப் போட்டு அடக்கி வைத்திருந்தாலும் எக்காளமாய்ச் சிரிக்கும் போது — தொந்தி செல்லக் குழந்தை போல் குதிக்கிறது.

"தலைவருக்கு எல்லாமே டமாசு தான்..."

ஜால்ரா போடுவதற்கென்றே வந்துள்ள கூட்டம் — தாளம் தப்பாமல் பின்பாட்டுப் பாட....

தெய்வநாயகி வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொண்டு உதட்டுக்குள் முணு முணுக்கிறாள்.

"என்னடா சொல்லுறா டாக்டரம்மா?"

"அதென்னவோ இங்கிலீசுல திட்டுறாங்க தலைவா..."

"வாயைப் பொத்திட்டு உட்காரச் சொல்லு. இல்லே — எம் மகனோட சபதம் நிஜமாவே நிறைவேறிடும்....!"

மீராவுக்கு இருந்தாற்போலிருந்து இந்தச் சூழ்நிலை பிடிக்கவில்லை. கண்களை மூடி, ஜன்னலோரமாய்ச் சாய்ந்து கொள்கிறாள்.

"என்ன மீரு... வண்டி கிளம்பவே இல்லையே.. அதுக்குள்ளே தூக்கமா?"

"தூக்கமில்லே."

"பின்னே?"

"அந்த எம். எல். ஏ. பேசறதைக் கேட்கவே பிடிக்கலே.. சம்பல் கொள்ளைக்காரன் மாதிரி மிரட்டறான்."

"அது அவரோட ரத்தத்தோட பொறந்த குணம்... இதைச் சொல்றியே... இவரு பையனை — காலேஜ்லே, பரீட்சை சமயத்துல பேப்பரை அவுட்டாக்கினதுக்காக காலேஜ் வாசலையே மிதிக்கக் கூடாதுன்னு பிரின்ஸ்பால் சொல்லிட்டாரு.. அவனும் சரிதான்னு டாட்டா காமிச்சிட்டுப் போயிட்டான். ஆனா, இவர் அந்த பிரின்ஸ்பாலைக் கதறக் கதற ஊரை விட்டு விரட்டியிருக்காரு பாரு.."

"ச்சே... சுத்த மோசம்.."

மீரா முகத்தைச் சுளிக்க, கீர்த்தி அவளுடைய கரத்தைப் பிடித்து, ஒவ்வொரு



''ராங்க் நம்பர்கிட்டே இவ்வளவு நேரம் என்ன பேசிக்கிட்டிருந்தே?''

''அடுத்த முதல்வர் கருணாநிதியா, ஜெயலலிதாவாங்கறதைப் பத்தித் தான்!''

— ஞா. ஞானமுத்து.

வளையலாய்ப் புரட்டிப் பார்க்கிறான்.

''எல்லாமே தங்கமில்லையா... நடு நடுவுல கண்ணாடி வளையலா.. நான் அத்தனையும் தங்கம்னு நினைச்சுட்டிருந்தேன்...''

மீரா சிரித்தபடி, கையை இழுத்துக் கொள்கிறாள்.

''ஒரு டஜன் தங்க வளையல் போடற அளவுக்கு வசதி இருந்திருந்தா — எங்க அப்பா, என்னை உங்களுக்குக் கொடுத்திருக்க மாட்டார்..''

அவன், அவளுடைய உள்ளங்கையில் கிள்ளுகிறான்.

''உனக்கு வாய் ஜாஸ்தி.''

மீரா ஓரக் கண்ணால் அவனுடைய முகத்தை ஆராய்கிறாள்.

அதில் கோபமில்லை. குழந்தைத்தனமான உற்சாகம்தான் இருந்தது. அவள் சொன்ன வார்த்தைகளை அவன் ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்ளவில்லை என்று தெரிகிறது.

பஸ்ஸின் நீண்ட ஹாரனுக்கு இடையே மீராவுக்குத் தன் தாய் சொன்ன வார்த்தைகளும் ஒலிப்பது போல —

''இந்தா மீரா, பொதேல்னு கல்லைத் தூக்கிப் போட்டாப்பல எதையாவது பேசுவியே... அதையெல்லாம் குறைச்சுக்கோ. அதுவும் மாப்பிள்ளை ஒண்ணு சொன்னா, விளையாட்டாக் கூட, அதைக் கேலி செய்யற மாதிரி எதுவும் சொல்லாதே...''

''மனசுல இருக்கிறதைத் தாலி கட்டினவர்கிட்டே கூடவா மறைக்கணும்?''

''முக்கியமா தாலி கட்டினவர் கிட்டத் தாண்டி மறைக்கணும். ஆம்பிளை மனசு ஒரு சமயம் போல இன்னொரு சமயம் இருக்காது. பெண்டாட்டி எத்தனை இளக்காரமாப் பேசினாலும் — தனக்கு அவகிட்டே காரியம் ஆக வேண்டியிருந்தா அத்தனை பேச்சையும் சிரிச்சிட்டே தாங்கிக்கும். ஆனா, வேற எங்கேயாவது இடிபட்டுட்டு வீட்டுக்கு வந்து 'புருபுரு'ன்னு சில நேரங்கள்லே உட்கார்ந்திருக்கும். அப்பப் பார்த்து, விளையாட்டா நாம எதையாவது சொல்லப் போய், அதுவே பெரிய விஷயமாப் போய் ருத்ர தாண்டவமாடிடும்... எங்க அப்பா அடிக்கடி சொல்லுவார். ஒரு குதிரையை எங்கே தட்டினா காத்தாப் பறக்கும்னு தெரிஞ்சுக்கறதுக்கு முன்னாலே எங்கே தொட்டாக் குப்புறத் தள்ளும்கறதை தெரிஞ்சுப்பான் புத்திசாலியின்னு...

அம்மா புத்திசாலிதான். இல்லாவிட்டால் அப்பா, சகலத்தையும் அவளிடம் ஒப்படைத்து விட்டு, நிம்மதியாய் இருப்பாரா?

வெளிப் பார்வைக்கு அந்த வீட்டில் அம்மாவுக்கு எந்தவித அதிகாரமும் இல்லை போலத்தான் தோன்றும். அப்பாதான் சத்தமாய்ப் பேசுவார்; தாம் தூம் என்று குதிப்பார்; விறைத்துக் கொண்டு உட்காருவார்.. அம்மா காப்பி தம்ளரும் கையுமாய்ப் புருஷன் பின்னாலேயே ஓடுவாள். அடிக்கடி 'எனக்கென்ன தெரியும்' என்பாள்... ஆனால் அப்பாவை இயக்குவதே அவள்தான் என்பது மீராவுக்கே சமீபத்தில் தானே தெரிந்தது...

அவளது எண்ண ஓட்டத்தை — முன் ஸீட்டில் அமர்ந்திருந்த பெண் கலைக்கிறாள்.

''டிரைவர்.. ஏழரைக்கு பஸ் புறப்படும்னு சொன்னீங்க.. மணி எட்டரை ஆகப் போறது. எப்பத்தான் கிளப்புவீங்க?''

''அவரைக் கேட்டு என்ன பிரயோசனம் பாமா. நம்ம எம். எல். ஏ. வண்டியில வர்றாரு இல்லே? அவர்கிட்டே இருந்து 'புறப்படு'ன்னு சிக்னல் வந்தாகணும்...

பாமா என்று அழைக்கப்பட்ட அந்தப் பெண், தன்னை வழியனுப்ப வந்திருந்த தாயை அலட்சியமாய் ஒரு பார்வை பார்த்து விட்டு, வேண்டுமென்றே குரலை உயர்த்தி, தருமராஜனிடம் இடக்காய்க் கேட்கிறாள்.

''என்ன எம். எல். ஏ. சார்.. பிளஷர்லே போக வேண்டியவரெல்லாம் பஸ்ஸுக்கு ஏன் வாரீங்க? இப்ப எங்க பாடில்ல திண்டாட்டமாப் போவுது?''

''யார்ரா அது?''

தர்மராஜன் எழுந்து நின்று, இரண்டாவது வரிசையைத் திரும்பிப் பார்த்த அதே கணத்தில் மீராவும் அவனைப் பார்க்கிறாள்.

இருபத்தைந்திலிருந்து முப்பது வரையில் எந்த வயசில் வேண்டுமானாலும் அவனை நிறுத்தி வைத்துப் பார்க்கலாம். ஆனால் அவனோ, தன்னைப் பதினெட்டு வயதுப் பெண் போல அலங்கரித்துக் கொண்டிருந்தாள்.

அசப்பில் பார்த்தால் ஏதோ ஒரு சினிமா நடிகையை ஞாபகப்படுத்துவது போன்ற மேக்கப்...

''யாரு... சத்யபாமாவா?''

''ஆமாங்க...''

''என்ன இடுஇப்புனு... நீயும் நடிக்கப் போறியா...''

பாமா, அளவுக்குச் சற்று அதிகமாகவே தலையைக் குலுக்கி வெட்கப்பட்டாள்.

''அதுக்கெல்லாம் ஒரு ராசி வேணுங்க... என் ராசி — இந்த நொண்டிப் பொண்ணை

வளர்க்கிறதோட சரியாப் போயிடும்னு நினைக்கிறேங்க...''

பாமா, ஜன்னலோரமாய்ச் சரிந்து உட்கார்ந்திருக்கும் சிறுமியை 'வெடுக்' கெனத் தூக்கிக் காண்பிக்க — சுமார் எட்டு வயது மதிக்கக்கூடிய அந்தப் பெண் குழந்தை — 'வில்' என்று அலற...

''கத்தாதே சனியனே... அய்யாவைப் பார்த்துக் கும்பிடு போடு...''

தர்மராஜன் அமர்த்தலாய்க் கையசைக்கிறார்.

''இருக்கட்டும்... உங்க அக்கா மக தானே..''

''ஆமாங்க. என் பிராணனை எடுக்கறதுக்காகவே இப்படி ஒண்ணைப் பெத்து, என் தலையிலக் கட்டிட்டுப் போயிருக்கா. நொண்டி முடமா இருந்தாலும் பரவாயில்லே. அநியாயத்துக்குப் பிடிவாதம். என்னாலே தாங்கவே முடியலே. அதான் கொண்டு விட்டுடலாம்னு...''

''நல்லாச் சொன்னே போ... பட்டணத்துல இப்ப உங்க அக்காதான் டாப் ஸ்டார்.. தெரியுமில்லே?''

''தெரியுமுங்க. அவ டாப்லே இருக்கணும்கறதுக்காக, என்னைப் பள்ளத்துல போட்டுத் தேய்க்கறது நியாயமா?''

''சினிமாவுக்கும் அரசியலுக்கும் நியாய அநியாயமே கிடையாதே பாமா... அது கிடக்கட்டும். பாக்கு வெட்டியில் வெட்டறாப்பல பேசுவியே.. பேசாம எங்க கட்சியில் சேர்ந்துடேன். ஒவ்வொரு மேடையிலேயும் புகுந்து விளையாடலாம்.. மேடைப் பேச்சுக்கு மட்டும் ஒரு மணி நேரத்துக்கு ஆயிரம் ரூபா தர்றேன்..''

தர்மலிங்கம் — பேச்சோடு பேச்சாய் — மட்டும் என்பதை அழுத்திச் சொன்ன விதத்தை, அவரது தொண்டர்கள் ரசித்துச் சிரிக்க — சத்யபாமாவுக்குப் புரிந்ததோ இல்லையோ 'களுக்'கெனச் சிரிக்கிறாள்.

''நான் கல்யாணம் செஞ்சுக்கப் போறேங்க...''

''அப்படி போடு... மாட்டினவன் யாரு...''

''பரமக்குடி மாப்பிள்ளைங்க...''

அவள் சொல்லிக் கொண்டிருக்கும் போதே — காதைத் துளைக்கும்படியாக மோட்டார் சைக்கிள் சப்தம்.

''குமரன் வந்துட்டான்.''

கீர்த்தி, மீராவின் கன்னத்தில் முகத்தைத் தேய்த்தபடி சொல்கிறான்.

மீரா, ஜன்னல் வழியே எட்டிப் பார்க்கிறாள். ஏதோ டிடர்ஜெண்ட் சோப்பு விளம்பரம் மாதிரி — வெள்ளை வெளேர் மல் வேஷ்டி, ஜிப்பாவுடன் முப்பது வயது இளைஞன் மோட்டார் சைக்கிளில் மிடுக்காக... ஒரு கையில் புகையும் சிகரெட்... இன்னொரு கையில் சுருட்டிய தினசரி...

மொத்தத்தில் ஐயனார் சிலை ஒன்று மாறுவேடம் போட்டு, குதிரைக்குப் பதிலாக, மோட்டார் சைக்கிளில் ஏறி வந்தாற் போல...

இமைக்கும் பொழுதில் அவன் பார்வை தெய்வநாயகியின் பக்கம் 'விசிறாமல் இல்லை... அவளோ — இவனைக் கண்டதும் தலையை. உட்பக்கமாய் இழுத்துக் கொள்கிறாள்.



''வாடா... எங்கேடா போயிட்டே...''

''ஃபாக்டரியில தகராறுப்பா.. பேசி முடிக்கிறதுக்குள்ளே போதும் போதும்னு ஆயிடுச்சு... நீங்க ஆறரை மணிக்கு வைத்தியர் தெருவுல அந்த வீட்டுல இருப்பீங்கன்னும் பொட்டியைக் கரெக்டா ஆறரைக்குக் கொண்டு போய்க் கொடுத்திடுன்னும் அம்மா சொன்னாங்க... ஏழே காலுக்குத் தான் நீங்க கிளம்புவீங்கன்னு எனக்குத் தெரியும். ஆனாலும் என்னால லேட்டாயிடக் கூடாதுன்னுதான் சூட்கேஸை நம்ம கருப்பையாகிட்டே கொடுத்தனுப்பிட்டேனே...''

''பொட்டி வந்து சேர்ந்துடுச்சுப்பா... எப்ப எலக்சனுலே நின்னாலும் டெபாஸிட் பணம் உன் கையாலேதான் கட்டறது வழக்கம். அதே மாதிரி எப்ப ஊருக்குக் கிளம்பினாலும் நீ வந்து வழியனுப்பறது தானேடா பழக்கம்..''

''இவரு பெரிய்ய சக்ரவர்த்தி.. இவரை வழியனுப்ப இந்த ராஜகுமாரன் வரணு மாக்கும். வைத்தியர் தெருவுல புதுசா ஒருத்தியைப் பிடிச்சிருக்காரு. இவரை எல்லாம்...''

தெய்வநாயகி, தம்பியிடம் புலம்புகிறாள்.

''உனக்கு இத்தனை அவஸ்தைப்பட்டும் வாய் போகலை அக்கா...''

இப்பொழுது கீர்த்தி, மீராவின் தோள் பட்டையில் இடிக்கிறான்.

''எல்லாப் பொம்பிளைங்களையுமே வாய்தான் கெடுக்கிறது...''

குமரன் அப்பாவுடன் ஏதோ பேசிவிட்டு, அப்படியே கண்டக்டரின் தோள் மீது கை போட்டபடி இறங்குகிறான்.

''கிளம்பலாம்பா... ரைட்டு..''

கண்டக்டருக்குப் பதிலாக, குமரனே, டிரைவருக்கு உத்தரவு பிறப்பிக்க — டிரைவரும் — குமரனைப் பார்த்துச் சிநேகமாய்ச் சிரித்தபடி வண்டியைக் கிளப்ப —

பஸ் நிலையத்திலிருந்து கிளம்பி மெயின் ரோடுக்கு மெள்ள வர...

பஸ்ஸை ஒட்டியே மோட்டார் சைக்கிளில் வந்த குமரன் தெய்வநாயகி அமர்ந்திருந்த ஜன்னலை ஒட்டியே தன் வாகனத்தைச் செலுத்த —

அவளோ, கழுத்தை நொடித்துக் கொள்கிறாள்.

''ஹலோ டாக்டர்... எப்படியிருக்கீங்க?''

''......''

''நீங்க எப்படி இருந்தா எனக்கென்ன... இளவரசு எப்படி இருக்கான்?''

''.......''

''எல்லாத்துக்கும் மௌனமா இருந்துட முடியாது டாக்டர்... என்னிக்காவது ஒரு நாள் — என் குழந்தையை என்கிட்டே ஒப்படைச்சுத்தான் தீரணும்...''

**மீ**ரா முகம் சுருக்குகிறாள்.

''என்ன ஊருப்பா... எப்பப் பாரு சண்டைய மடியில கட்டிட்டு அலையறது..''

''ஊ... மெட்ராஸ் அப்படியே சந்யாசிங்க ஊராக்கும். அம்மணி... இந்த மண்ணுக்குக் கொஞ்சம் சுரணை அதிகம். அது சண்டையானாலும் சரி. வேற சமாசாரமானாலும் சரி. மத்தவங்களை விட ஒரு டிகிரி கூடத்தான். பொறுத்துக்க. பெங்களூர்லே புரிஞ்சுப்பே...''

பஸ் முக்கி முனகி வேகமெடுத்த ஐந்தாவது நிமிஷத்திலேயே பெரிய குலுக்கலுடன் நிற்கிறது...

வெளியே —

பை, படுக்கையுடன் நாலு பேர் கொண்ட குடும்பமே அலையக் குலைய ஓடி வருகிறது.

''ஸ்டாப்... ஸ்டாப்!''

''மெட்ராஸ் வரைக்கும் ஒரேயொரு டிக்கட்தாங்க இருக்கு...''

''ஐயோ... எப்படியாவது நாங்க அட்ஜஸ்ட் பண்ணிக்கிறோம். எங்கப்பா சாகக் கிடக்கார்.. மருமகளையும், குழந்தைகளையும் பார்த்தே ஆகணும்னு...''

நாலு பேரில் — குடும்பத் தலைவன் — அழ மாட்டாத குறையாய்க் கெஞ்ச, கண்டக்டர் நிர்தாட்சண்யமாய் மறுக்கிறார்.

''யோவ்! ஓவர் லோடு ஏத்தி, என்னை மாட்டிக்கச் சொல்றியா.. வேணுமானா நீ ஒரு ஆள் ஏறு. மத்த பேரைப் பின்னாடி பஸ்லே வரச் சொல்லு. வழியில செக்கிங்லே மாட்டினா நாங்கதான் அவதிப்படுவோம்.''

கீர்த்தி, மீராவின் இடக்கை விரல்களைத் தன் வலக்கை விரல்களோடு பின்னிக் கொள்கிறான்.

கண்டக்டரோ நேரே கீர்த்தியிடம் வந்து நிற்கிறார்.

''சார், உங்க ஒய்ஃபை நாலு ஸீட் தள்ளி ஒரு பொம்பிளை மாத்திரம் உட்கார்ந்திருக்காங்க.. அங்கே போய் உட்காரச் சொல்லலாமா?''

''ஏன்?''

கீர்த்திக்கு, மூக்கு நுனியில் கோபம் வந்து நாற்காலி போட்டு உட்காருகிறது.

(தொடரும்)

''காலம் ரொம்பத்தான் முன்னேறிடிச்சு.''

''எப்படிச் சொல்றீங்க?''

''பாருங்களேன்... இந்த ஆபீஸ்ல, 'எக்காரணம் கொண்டும் கொடுத்த லஞ்சம் திருப்பித் தரப்பட மாட்டாது'ன்னு போர்டே வெச்சிருக்காங்க!''

— சீர்காழி வி. ரேவதி.



நீங்கள் என்றும்
இளமைத் தோற்றத்தைப்
பெற...



கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய் கொண்டு இப்பொழுது நீங்கள் என்றும் இளமைத் தோற்றத்தைப் பெறலாம். அதன் மேம்படுத்தப்பட்ட ஃபார்முலா உங்கள் கேசத்திற்கு இயற்கையான தோற்றத்தை அளித்து நீடிக்கச் செய்கிறது. மேலும் இதை உபயோகிப்பது எளிது.

## கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய்
## இப்பொழுது உயர்தரமான தொழில்நுட்பத்துடன்




கோத்ரெஜ் வழங்கும் உன்னதமான பவுடர் ஹேர் டைய்

Mudra: B: GS: 909: 2012: TM



4

நல்ல வண்ணம் வாழலாம்

# படிப்பு வேறு; அறிவு வேறு

குடியிருக்கும் வீட்டுக்குப் படி, நடை, கூடம், முற்றம், வெளி என்று ஐந்து உறுப்புகள் இருக்கின்றன. வீடு என்றால் மோட்சம் என்ற பொருளும் உண்டு. அதற்கும் இதே ஐந்து பிரிவுகள்தாம். முதலில் படி. அதாவது நல்ல நூல்களைப் படி. அது முதல் நிலை. படித்தால் போதாது படித்த வழியில் நட. அதுதான் நடை. இது இரண்டாவது நிலை. நடப்பது கஷ்டம் என்றால் அப்படி நடப்பவர்கள் உடன் கூடி இரு. சத் சங்கம் செய்... அதுதான் கூடம். இப்படி வாழ்வு முற்றும் என்றால் (நான்காவது முற்றம்) வெளி – வெளியாகிய இறைவன் உடன் கலக்கலாம். இந்த வீடு, அந்த வீடு பெற விளக்கம்! சரிதானே?

சில பேர் நிறைய படிப்பார்கள். எந்த நூல்படியும் நடக்க மாட்டார்கள். திருக்குறளைத் தலைகீழாக ஒப்புவிப்பார்கள். ஒரு குறளையும் பின்பற்ற மாட்டார்கள்.

டாக்டரிடம் போகிறோம். வயிற்று வலி என்று புலம்பியதும் ஒரு காகிதத்தை எடுத்து மருந்து எழுதி "இதை மூன்று வேளை சாப்பிடு.." என்கிறார் டாக்டர். எழுதிக் கொடுத்த காகிதத்தையே மூன்று வேளை சாப்பிட்டால் வலி குறையுமா? கூடுமா?

இன்றைய படிப்பில் புத்தகங்கள் விழுங்கப்படுகின்றன. மனப்பாடங்கள் பட்டம் பெறுகின்றன. மனித டேப் ரிகார்டர்கள் டிப்ளமாக்களுடன் படிக்கட்டு படிக்கட்டாக ஏறி இறங்குகின்றன! சொற்பொழிவாளர்கள் ஒலிக் குப்பைகளால் காதுகளையும் மனங்களையும் நிரப்புகிறார்கள்.

படிப்பு நடைமுறைக்கு வரவில்லை. கேள்வி ஞானம் வாழ்க்கை ஞானம் ஆகவில்லை. எங்கு பார்த்தாலும் ஏட்டுச் சுரைக்காய்கள் என்பதால் உலகம் பசியோடு உட்கார்ந்து பெருமூச்சு விட்டுக்

சுகிசிவம்

கொண்டிருக்கிறது.

**அது** ஒரு பொற்காலம் —

ஸ்ரீரங்கத்தின் துளசி மணம் கமழும் தெருக்களினூடே, இரவு வேளையில் அந்தப் பெரியவர் வேகம் வேகமாக நடக்கிறார். அவரது சீடர்கள் பதுங்கிப் பதுங்கி அவரைப் பின்தொடர்ந்தார்கள். ஊருக்கு ஒதுக்குப்புறமாக ஒரு குடிசை. அதற்குள் நுழைந்து கதவைச் சார்த்திக் கொண்டார்.

இரவு நேரத்தில், யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டு வந்து ஊருக்கு ஒதுக்குப்புறமான குடிசைக்கு வந்து கதவைச் சாற்றிக் கொண்டார் குருநாதர் என்றால் சீடர்களுக்கு மனம் எப்படி இருக்கும்? பரபரப்பான கற்பனைகள்.. ஓலைகளின் இடுக்குவழியாக உள்ளே பார்க்க...

மங்கலான வெளிச்சத்தில், கட்டிலில் கிடக்கும் மெலிந்த உருவத்தை மெல்லத் தாங்கி எடுத்து உடலைத் துடைத்துச் சுத்தப் படுத்தி, பணிவிடைகள் செய்கிறார் குருநாதர்.

மாறனேரி நம்பிகள் என்ற நோயுற்ற ஹரிஜன வைணவர் ஒருவருக்கு, பெரிய நம்பிகள் என்ற அந்தண வைணவர்தான் இந்த அரும்பணி செய்த அன்பர். செய்தி காட்டுத் தீ போல ஸ்ரீரங்கம் முழுவதும் பரவியது.

ஹரிஜனரைத் தொட்டுப் பணி செய்யும் அந்தண நம்பிகளை என்ன செய்வது? ஜாதிப்ரஷ்டம் செய்வதா? விசாரணை நடத்துவதா? ஸ்ரீரங்கத்தில் தேர்த் திருவிழா வேறு...

''ரங்கனின் தேர் பெரியநம்பிகள் வீட்டு வாசலில் நிற்கலாகாது; இடைக்கால அவமானமாக இது போதும்'' என்று தீர்மானம் ஆயிற்று.

கருணைக் கடல் தேர் ஊர்ந்து வந்த சமயம், பெரியநம்பிகளின் திருமகள் அத்துழாய், கண்களில் நீர்மல்க, கதவைப் பிடித்தபடி வெளியிலே பார்த்தவள், வாய் திறந்து புலம்பினாள்! ''எல்லோரும் எம்மை விலக்கினர்.. ரங்கா! நீயும் எமக்கு விலக்கோ!'' என்றாள்.

அச்சு முறிந்து தேர் வீட்டு வாசலிலேயே நின்று விட்டது! பத்து நிமிடம் அல்ல... பல மணி நேரம் பகவான் நின்றார்.

**இ**தற்கும் மேலே ஒரு படி... மாறனேரி நம்பிகள் திருநாடு அலங்கரித்தார். மரணம் என்ற அவலநிலை கடந்து அமர நிலையாகப் பரமபதம் பெற்றார். அந்த ஹரிஜனப் பெரியவருக்குப் பிரேத ஸம்ஸ்காரம் என்னும் இறுதிக் கடன் வழிபாட்டை அந்தணராகிய பெரிய நம்பிகள் தாமே செய்தார். புனிதமான ஒரு புரட்சி அமைதியாக நடந்தேறியது.

பரம்பரையான நெறிமுறைகளுக்கு இது விரோதம் என்று பழமைவாதிகள் வருத்தம் காட்டினர். சபையைக் கூட்டி பெரிய நம்பிகளை விலக்கி வைப்பது என்று முடிவு கட்டினர். அவரோ அவர்களுக்கு உண்மையை விளக்கி வைப்பது என்று முடிவு கட்டினார்.

நம்பிகள் உருக்கமாகச் சொன்னார்:

''ஆளவந்தார் நம் ஆசிரியர். அவர் ஆழ்வார் பாசுரங்களை அனுபவித்து விளக்குவதை, ஹரிஜன மரபில் பிறந்ததால் கோவிலுக்கு வெளியே நின்று மாறனேரி நம்பிகள் கேட்பார்.

''உடல்நலம் குறைந்து பிளவை நோய் வாட்ட, ஆளவந்தார் பலம் குறைந்து உரைத்தார். கோவிலுக்கு வெளியே நின்ற மாறனேரி நம்பிக்குக் கேட்கவில்லை.

''ஒருநாள் உபந்யாஸம் செய்ய வரும் சமயம் கால்களில் விழுந்தார். கண்ணீர் மல்க ''சுவாமி காலட்சேபம் செய்யும் இந்தக் குறைந்த நேரம் தேவரீர் நோயை எனக்குத் தந்து விட்டுப் போய் ஆனந்தமாகக் காலட்சேபம் செய்ய வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

''ஆளவந்தார் ''அப்படியே ஆகட்டும்'' என்று தம் நோயை மாறனேரி நம்பிகட்கு வழங்கி விட்டு காலட்சேபம் செய்யப் போனார். உடல் உபாதை இன்றி ஆனந்த மாகப் பேசினார். திரும்பி வந்ததும் நோயைத் திருப்பிக் கேட்க, ''குரு பிரசாத மாக என்னிடமே இருக்கட்டும்'' என்று தர மறுத்தார். குருபக்தியைக் கண்ட ஆள வந்தார், தம் நோயைப் பெற்றுக் கொண்ட மாறனேரி நம்பிகளைத் தம்மைப் போலவே பாவிக்க வேண்டும் என்று எனக்குக் கட்டளையிட்டார். ஆகவே மாறனேரி நம் பிகளை மதித்துப் பிரேத ஸம்ஸ்காரம் செய்ததில் குற்றமில்லை.''

**இ**ந்த வாதத்தைச் சபை ஏற்க வில்லை! ''ஹரிஜன மரபில் வந்த ஒருவருக்கு அந்தண மரபினர் ஈமக்கிரியை செய்ய என்ன அனுமதி உள்ளது?'' என்றனர்.

பெரியநம்பிகள் கேட்டார்: ''நம்மை விட பட்சி பறவைகள் தாழ்ந்தவையா? உயர்ந்தவையா?''

''தாழ்ந்தவை'' என்றனர் சபையோர்.

''ஸ்ரீமந் நாராயணன் ராமனாக அவதாரம் செய்தாரே, நம்மை விட உயர்ந்தவரா? தாழ்ந்தவரா?''

''அபசாரம்.. அபசாரம்... இது என்ன கேள்வி! ராமர் நம்மை விடப் பன்மடங்கு உயர்ந்தவர்.''

''நம்மை விட உயர்ந்த ராமர், நம்மை விடத் தாழ்ந்த பட்சிக்கு, அதாவது ஜடாயுவுக்கு ஈமக்கிரியை செய்ததாகச் சொல்லுகிறோம். மனிதன் மனிதனுக்குச் செய்ததில் என்ன குற்றம்?''

சபை ஸ்தம்பித்தது.

ராமாயணம் படிக்க மட்டுமல்ல பின்பற்ற.

(இன்னும் சொல்வேன்)

## நீங்கள் கேட்டவை — தராசு

# அனல் கக்கப் பேசுவதில் சிறந்தவர் யார்?

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

பா. ரவிச்சந்திரன்,
சாத்தங்குடி சாலை,
அரூர் அஞ்சல்,
கும்பகோணம் வட்டம் — 612 501.

o கே. கே. வஸந்த், மாப்பிள்ளைகுப்பம்.

**? காங்கிரஸ் தேர்தல் அறிக்கையில் கவனிக்கத்தக்க அம்சம் எது?**

! லஞ்ச ஊழல் பற்றி ஒரு வார்த்தை கூட இடம்பெறாதது.

o டி. தாழை பிரபு, குடியாத்தம்.

**? முன்னாள் ஆட்சி செய்த பிரதமர்களில் உங்களைக் கவர்ந்தவர் யார்?**

! கீர்த்தியில் உயர்ந்த சிறிய மூர்த்தி.

o ஏ. ஜப்பார் காதர், பழைய தாம்பரம்.

**? தேவிலால் பிரதமராகும் வாய்ப்பு அமைந்தால்...?**

! நல்ல வேளை மாநில அரசியலுக்குத் திரும்பி விட்டார்!

o எஸ். ஏ. நாகேந்திரன், மதுரை — 2.

**? நான் ஒரு காட்சியில் கூடப் பாத்திரத்தை உணர்ந்து நடித்ததில்லை அதற்காகக் கவலைப்படவும் இல்லை என ரஜினி கூறுகிறாரே?**

! நடிகருக்காகக் கதாபாத்திரம் உருவாக்கப்படும் போது நடிகர் கவலைப்பட வேண்டியதில்லை. கதாபாத்திரத்துக்காக நடிகர் தன்னை மாற்றிக் கொள்ள நேரும் போதுதான் கவலை. ரஜினியின் பெரும்பாலான ரோல்கள் முந்தைய ரகம்.

o ஆர். அப்துல் சலாம், திருச்சி.

**? யார் சிம்மாசனத்தில் அமர்ந்தாலும் சிம்மமாக இருந்து தட்டிக் கேட்பேன் என்கிறாரே டி. ராஜேந்தர்?**

! அதற்கு முன்னதாக காங்கேயம், பர்கூர் தொகுதிகளில் மக்கள் கேட்கப் போவது அவர் கர்ஜனையா, அல்லது மியாவ் மியாவாகத்தான் அவர்கள் காதில் ஒலிக்கப் போகிறதா, பார்க்கலாம்!

o வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சை.

**? ராஜீவ் காந்தியின் எடைக்கு எடை ரத்தம் அளிக்கப்பட்டு இருக்கிறதே?**

! தேர்தலுக்கு இன்னும் ஒரு மாதம் இருக்கும்போதே குத்து, வெட்டு, கொலை என்று ஆரம்பமாகி விட்டதைப் பார்த்தால், ரத்த தானம் தேர்தலுக்கு முன் எல்லா கட்சியினரும் பின்பற்றக் கூடிய ஒரு நல்ல முன்னுதாரணம்தான்!

o சி. ப. சாமி, கொங்கணாபுரம்.

**? அடுத்த முதலமைச்சர் "ஜெ"வா? "க"வா?**

! பொ. பா.!

o எஸ். வி. ரவி கணேஷ், கும்பகோணம்.

**? ஆர். எம். வீ., எஸ். டி. எஸ்.க்கு ஸீட் கிடைக்கவில்லையே?**

! 'எஸ். டி. எஸ். ஸுக்கும் ஸீட் கிடைக்கவில்லை' என்று ஆர். எம். வீ.க்கு இருந்த ஒரே ஆறுதலும் போச்சு. பாவம்!

o பா. ரவிச்சந்திரன், அரூர் *

**? குர்திஷ் (ஈராக்) இன மக்களுக்கு அமெரிக்காவும் அதன் நேச நாடுகளும் செய்து வரும் உதவி பற்றி?**

! வளைகுடா போரின் சோகமான பின் விளைவுகளுள் ஒன்று. ஈராக் அதிபர் சத்தாம், தமது நாட்டு மக்கள் மீதே போர் தொடுத்திருப்பது. புரட்சியாளர் மட்டுமின்றி, அப்பாவி மக்களும் பலிவாங்கப்படுகிறார்கள். இதனால் அகதிகளாகப் பலர் ஈரானுக்கும் இதர நாடுகளுக்கும் ஓடுகிறார்கள். அவர்களுக்கு உதவ வேண்டியது அமெரிக்காவின் தார்மீகக் கடமையாகிறது. காரணம், பந்நாட்டுப் படைகள் ஸத்தாமை ஒழித்துக் கட்டுவதில் வெற்றி பெற்று விடும் என்ற நம்பிக்கையிலும் அவர்களின் தூண்டுதலின் பேரிலும்தான் புரட்சியாளர்கள் அந்தச் சர்வாதிகாரியை எதிர்க்கத் துணிந்தனர். ஆனால் குவெய்த் விடுவிக்கப்பட்டதை அடுத்து நிகழ்ந்த போர் நிறுத்தம், நிலைமையை அடியோடு மாற்றி விட்டது. சத்தாம் உசேன், பந்நாட்டுப் படைகளிடம்

* சிறிய மூர்த்தி * பலம்! பலவீனம்!



* பிரதமரானால்...! * ஆறுதல் போச்சு!

* சிங்கமாயிருந்து... * கவலைப்படாதவர்!



* எடைக்கு எடை... * டிக்கெட் இல்லை!

அடைந்த தோல்வியால் மூண்ட ஆத்திரத்தை, இந்த இன மக்கள் மீது வன்முறையைப் பிரயோகித்துத் தீர்த்துக் கொள்கிறார். கொடிய நாப்ளாம் குண்டுகளை வீசவும் அவர் தயங்கவில்லை. இந்த இன மக்களுக்கு உடையும் உணவும் அளித்து உதவினால் போதாது, ஸத்தாம் படைகள் மீது ஆயுதத் தாக்குதல் நடத்தியேனும் இவர்களைக் காப்பாற்றியாக வேண்டும் என்று கருதுவோர் உண்டு. ஆனால் அமெரிக்கா இன்னொரு வளைகுடா போருக்குத் தயாராக இல்லை. இந்த அக்கிரமத்தை ஈராக்கின் உள்நாட்டு விவகாரமாகக் கருதி அகதிகளுக்கு உதவுவதோடு நிற்கிறது.

o வாணி சங்கர், சென்னை — 5.

**? தமிழக காங்கிரஸின் அவல நிலை குறித்துத் தலையங்கம் எழுதிய கல்கி, ஜனதா தளத்தைக் கருணாநிதி மதிப்புடன் நடத்துவதாகக் கருதுகிறதா?**

! தன்னைப் போலவே ஜனதா தளமும் மதிப்பிழந்ததே என்று காங்கிரஸ் ஆறுதல் அடைய வேண்டுமா? மேலும் தமிழக ஜனதா தளத்தையும் தமிழக காங்கிரஸையும் ஒன்றாகக் கருத முடியாது. ஜனதா தளம் சமீபத்தில் தோன்றிய கட்சி. காங்கிரஸ் பாரம்பரியப் பெருமை மிக்கது. ஆனால் ஜனதா தளத்துக்கு இருந்த அளவு கூட அதிகத் தொகுதிகளுக்குப் போராடும் மனப்பான்மை காங்கிரஸுக்கு இல்லையே, குட்டக் குட்டக் குனிகிறதே. அதற்கு இப்படி ஒரு நிலை நேர்ந்ததே என்பதுதான் நம் வருத்தம். அது மீண்டும் இங்கே வேரூன்றித் தழைக்க வேண்டும்; தமிழகத்திலும் ஓர் அகில இந்தியக் கட்சி மக்களின் நல்லாதரவைப் பெறும் விதத்தில் நடந்து கொண்டு, உயர வேண்டும் என்று பலர் எண்ணுவதில் தவறில்லை.

o ப. விஜயபாலன், சென்னை.

**? அனல் கக்கும் பேச்சுப் பேசுவதில் இன்று சிறந்தவர் யார்?**

! யார் வேணுமானாலும் அனல் கக்கலாம். ஆனால் அனல் கக்கும் போதே உண்மைகளை எடுத்துக்காட்டி மாயைகளைப் பொசுக்குவோர் சிலரே. அவர்களில் ஒருவர் பட்நாயக். அதனால்தான் அவருக்கு ஜனதா தளம் டிக்கெட் தராமல் விட்டு விட்டது!

o வெ. கு. ராஜராஜன், திருபுவனம்.

**? 'வி. பி. சிங்கிற்கு — ராஜீவ் காந்தியும் கருணாநிதிக்கு ஜெயலலிதாவும் பரவாயில்லை' என்று சோ கூறியுள்ளாரே?**

! வேறு பல பத்திரிகை ஆசிரியர்களுக்கு சோ பரவாயில்லை!

o எல். ஆர். விஜயகுமார், சென்னை.

**? எம். ஜி. ஆர். — கருணாநிதி படத்துடன் வோட்டு வேட்டையாடுவது என்ற திருநாவுக்கரசு அணியின் முடிவுக்குப் பலன் கிடைக்குமா?**

! கிடைக்கும் — தி. மு. க. ஆதரவு வோட்டுக்களைக் குறைப்பதில்.

o எல். நீலா ஈஸ்வரி, பந்தல்குடி.

**? ஜெயலலிதாவின் பலம் எது? பலவீனம் எது?**

! பலம் எம். ஜி. ஆர்; பலவீனம் ஜெ.

o பாலசுப்பிரமணியன், செங்குன்றம்.

**? கட்சித் தலைவரின் பாதை சில சமயம் தன் மனத்துக்குப் பிடிக்காமல் போகும் போது ஒரு தொண்டன் தன் எதிர்ப்பை அந்தத் தலைவர் புரிந்து கொள்ள எந்த விதத்தில் காட்டுவது உகந்தது?**

! நமது தேசத்தில் பொதுவாகவே தலைவர்களிடத்தில் சகிப்புத் தன்மை குறைவாக உள்ளது. அதனால் தொண்டன் எந்த விதத்தில் தன் எதிர்ப்பைத் தெரிவித்தாலும் தவறாகக் கருதப்படுகிறது. தலைவர்கள், தவறே செய்ய முடியாத சூப்பர் மேன்களாகத் தங்களை எண்ணிக் கொள்கிற மனப்பான்மை மாறினாலன்றி, உட்கட்சி ஜனநாயகம் வலுப்பெறாது. கட்சிக்குள் கருத்துச் சுதந்திரம் உரிய மதிப்பைப் பெறாது.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: பிரஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. தொலைபேசி: ஆசிரியர் குழு அலுவலகம்: 2344145; சர்குலேஷன் மானேஜர்: 2344190; விளம்பரம் — சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/-; விமானத் தபால்: ரூ. 350/-.

# சுவையான இனிப்புப்பண்டங்கள் எளிதாகத் தயாரிக்கலாம்.

மில்க்மெய்டினால் தயாரிக்கப்பட்ட, சுவை நிறைந்த இந்த ஸ்பெஷல் இனிப்புப் பண்டங்களை உங்கள் குடும்பத்தினர் விரும்புவார்கள். இவற்றை எளிதாகத் தயாரிப்பதில் உங்களுக்கு ஒரே ஆனந்தம்தான்.

## பாதாம் கீர்

**5 பேருக்கு**
**சமைக்க ஆகும் நேரம்: 20 நிமிடங்கள்**

**தேவை**

மில்க்மெய்ட் — 1 டின், புதுப் பால் — 1 லிட்டர்
முந்திரிப் பருப்பு — 50 கிராம் (6 டேபிள் ஸ்பூன்)
வாதாம் பருப்பு எஸ்ஸென்ஸ் — 1/4 டீஸ்பூன்

**செய்முறை**

1. பாலைக் காய்ச்சி ஆற வைக்கவும். உடைத்த முந்திரிப் பருப்பை 2 கப் பாலில் 2 மணி நேரத்துக்கு ஊற வைக்கவும். ஊறிய முந்திரிப் பருப்பை மையாக அரைக்கவும்.
2. மில்க்மெய்டையும், அரைத்த முந்திரிப் பருப்பையும் சேர்த்து கலக்கவும்.
3. வாதாம் பருப்பு எஸ்ஸென்ஸை சேர்க்கவும்.
4. சூடாகவோ, குளிர வைத்தோ பரிமாறவும்.

## கடலைப்பருப்பு பாயாசம்

**6 பேருக்கு**
**செய்ய ஆகும் நேரம்: 30-35 நிமிடங்கள்**

**தேவை**

| | |
|---|---|
| மில்க்மெய்ட் | — 1 டின் |
| கடலைப் பருப்பு | — 1 கப் |
| வெல்லம் | — 100 கிராம் (1/2 கப்) |
| ஏலக்காய் பவுடர் | — 1/4 டீஸ்பூன் |
| தேங்காய் | — 1 (துருவப்பட்டது) |
| முந்திரிப் பருப்பு | — 10 (விரும்பினால்) |
| நெய் | — 1 டேபிள்ஸ்பூன் |

**செய்முறை**

1. கடலைப் பருப்பை 3 கப் தண்ணீரில் குழையும் வரை வேக விட்டு பருப்பை மசிக்கவும்.
2. வெல்லத்தை ஒரு கப் நீரில் கரைத்து வடிகட்டவும்.
3. தேங்காய்த் துருவலிலிருந்து ஒரு கப் கெட்டிப்பாலும் ஒரு கப் அடர்த்தி குறைந்த தேங்காய்ப் பாலும் எடுத்துக்கொள்ளவும்.
4. வெல்லப்பாகு, பருப்பு, அடர்த்தி குறைந்த தேங்காய்ப் பால் மற்றும் ஏலக்காய்ப் பொடியை கலவையாக்கிக் கொள்ளவும்.
5. கலவையை இளந்தீயில் சிறிது நேரத்திற்கு வேகவிட்டு மில்க்மெய்ட் சேர்த்து கிளறி கெட்டித் தேங்காய்ப் பாலை சேர்க்கவும்.
6. முந்திரிப்பருப்பை நெய்யில் வறுத்து எடுத்தபின் மீதியுள்ள நெய்யிலேயே தேங்காய்த் துண்டுகளையும் வறுக்கவும்.
7. பாயாசத்தில் முந்திரிப்பருப்பு, தேங்காய்த் துண்டுகள் மற்றும் நெய்யைச் சேர்த்து கலக்கவும். அடுப்பிலிருந்து இறக்கி பரிமாறவும்.

## விருந்தை பல செய்திட மில்க்மெய்ட்

## இலவசம்

**மில்க்மெய்ட் ரெசிப்பி புத்தகம்**
அதனைப் பெற போஸ்ட் பேக் 22,
புது தில்லி-110019
என்னும் முகவரிக்கு அனுப்பவும்.




TS McCann/MM/291 TM

நெஸ்லேயின் ஒரு தரமான தயாரிப்பு